# சிந்தனைக் களஞ்சியம்




வித்துவான் கா. மாயாண்டி பாரதி, எம். ஏ., பி. ஓ. எல்.

*தமிழ் விரிவுரையாளர் :*

*தூய யோவான் கல்லூரி, பாளையங்கோட்டை.*







பழனியப்பா பிரதர்ஸ்

சேப்பாக்கம் சென்னை-5 : : தெப்பக்குளம் திருச்சி -2

# முன்னுரை

'இலக்கியம் சிறந்த சிந்தனைக் களஞ்சியம்' என்பது மேனாட்டுச் சிந்தனைச் சிற்பி தந்த மெய்யுரை. சிந்திக்கும் ஆற்றல் மக்களினத்திற்கே யுரியதாய் அமைந்த சிறந்த செல்வம். சிந்திப்பவர் மற்றவர்களைவிட ஆழ்ந்து சிந்தித்தலும், சிந்திப்பதோடு அமையாது சிந்தித்தவற்றைச் சிறந்த முறையில் உருவாக்கிக் காட்டுதலும் உடையவராயின் அவரே உண்மைச் சிந்தனையாளராவர். இத்தகைய சிந்தனையாளர்கள் தமிழகத்தில் செறிந்து வாழ்ந்து வந்தனர். அப்பெருமக்கள் தம் சிந்தனையிலிருந்து உருப்பெற்ற அருங் கருத்துச் செல்வங்களைக் காற்றோடு கலந்து மறைந்து போகாமல் ஏட்டிலும் கல்லிலும் பொதிந்து வைத்துள்ளனர். அவ்வாறு போற்றி வைத்த சிந்தனைச் செல்வங்களுள் தலை சிறந்ததே இலக்கியச் செல்வம். தமிழிலக்கியங்கள் அனைத்தும் தண்டமிழ்ப் புலவர்களின் சிந்தனைத் தொகுதிகளே. அவை வெவ்வேறு காலத்தே தோன்றினும், எக் காலத்திற்கும் பொதுமையாக நின்று புனித வாழ்வை நல்கும் கருத்துக்களை மட்டும் தொகுத்துக் காண ஓர் அரிய வாய்ப்புக் கிடைத்தது. அவ்வாய்ப்பின் பயனே இச் '**சிந்தனைக் களஞ்சியம்**' எனும் சிறு நூல்.

இந் நூலின்கண், மூன்று ஆராய்ச்சிச் சொற்பொழிவுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. பல்கலைக் கழக விரிவுரைப் பேரவையில் பேசியது ஒன்று; பத்துப் பாட்டு மாநாட்டில் நிகழ்த்தியது பிறிதொன்று; இலங்கை மங்கையர் கழகத்தில் விரிவுரை செய்தது மற்றொன்று. இம் முப் பேரவைகளிலும் சொற்பொழிவாற்றிய பொருள்களைப் பற்றிச் சுருக்கியும் பெருக்கியும், பொருந்தும் தலைப்புகள்

தந்து மாற்றியும் புதுக்கியும் ஆராய்ச்சிக் கட்டுரைகளாக வரைந்துள்ளேன். முதற் கட்டுரையில், இலக்கியத்தின் வித்து மானப்பண்பே என நிறுவியதோடு, அப் பண்பு பண்டு தொட்டு இன்று வரையுள்ள இலக்கியங்களுள் எவ்வாறு உயிரோட்டம் போன்று ஊடுருவி அழியாப் பெருமை பெற்றுள்ளது என்பதையும் காட்டியுள்ளேன். இரண்டாவது கட்டுரையில், சங்க கால வள்ளல்களின் கொடை வளமும், நல்லியக்கோடனின் மனவளமும், கலை வாழ்வும் முறையாக எழுதப்பட்டுள்ளன. மூன்ருவது கட்டுரையில், தொல்காப்பியத்திலே அமைந்துள்ள 'தோழமைச் செல்வம்' அழியாது தொடர்ந்து இலக்கியங்களில் பேசப்பட்டு வருவதும், இன்றைய உலகத்திற்கு இன்பந்தரும் தலையாய செல்வம் என்பதும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இலக்கிய வழக்கி லன்றி, உலக வழக்கில் அப் பண்பு பெற்றுள்ள தனிச் சிறப்பினையும் ஆங்காங்கு எடுத்துக் காட்டியுள்ளேன். கட்டுரைகளில் வரும் கருத்துக்கள் பெரும் பகுதியும் தமிழ்ச் சான்ருேரின் சிந்தனையிற் பிறந்த செம்மணிகளே. எனது என்று உரிமை பாராட்டிச் சொல்லத்தக்கவை மிகவும் குறைவே. தொகுத்துத் தரும் முயற்சியே என்னுடையது. இந் நூலினை இன்றைய தமிழ் மக்களும், சிறப்பாக மாணவர் உலகமும் பயின்று அறிவு நலமும் மனவளமும் பெற்றுச் சிறப்புறுவாராஞல் அதுவே எனது முயற்சிக்குத் தமிழகம் அளித்த பரிசு என மகிழ்வேன்.

இதன்கண் உள்ள 'இலக்கிய வித்து' என்பது பற்றி என்னைப் பேசுமாறு பணித்தும், அதனைக் கேட்டுப் பாராட்டிய தோடு எழுதுமாறு ஊக்குவித்துப் பல வகையாலும் உதவி வரும் தூய யோவான் கல்லூரித் தலைவர் உயர்திரு. ஜே. வேதசிரோமணி, எம். ஏ., பி. எல். அவர்கட்கும், 'சிறுபாணுற்றுப்படை' (ஓவியர் பெருமகன்) என்பது பற்றி ஆராய்ச்சிச் சொற்பொழிவு வரையுமாறு தூண்டியும், நூலாக வெளியிட்டும் உதவிய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக அமைச்சர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கட்கும்,

'தோழமைச் செல்வம்' என்பது குறித்து இலங்கையில் ஆற்றிய சொற்பொழிவை நூல் வடிவில் கொண்டுவர வேண்டும் என்று நேர்முகமாகவும், கடிதவாயிலாகவும் தூண்டிய மதுரைப் பெருவணிகரும், எனது அண்ணலார் மைந்தரும் ஆகிய உயர்திரு. நடராச முதலியார் அவர்கட்கும் என் பணிவுசால் அன்பும் மறப்பிலா நன்றியும் என்றும் உரியவாம்.

இந் நூலினை முன்போலவே அழகிய முறையில் பதித்து ஊக்கமும் ஆக்கமும் தந்துதவும் பழனியப்பா வெளியீட்டாருக்கும் என் உளங்கனிந்த நன்றி யுரியது.

இத் தமிழ்த் தொண்டு இனிதே நிறைவுறத் துணைநின்ற தமிழ்த் தெய்வத்தின் திருவடிகள் என் தலைமேலன.

பாளையங்கோட்டை
17—2—'57

கா. மாயாண்டி பாரதி

## உள்ளுறை

# சிந்தனைக் களஞ்சியம்



## இலக்கிய வித்து

### இலக்கியமே பண்பாடு

உலக நாடுகள் அனைத்திலும் இலக்கியங்கள் காணப்படுகின்றன. எனினும், சில நாடுகளில் உள்ள இனங்கள் இலக்கியமில்லாமல் வாழ்கின்றன. அவை பெயரளவில் வாழ்கின்றனவே யல்லாமல் உண்மையில் வாழ்வதாகக் கூறவியலாது. இலக்கியத்தைப் பெருத எந்த நாடும் பிறரால் மதிக்கப்படுவதில்லை; இலக்கியத்தைப் பெருத எந்த இனமும் பண்பாடு உடையதாக ஒப்புக்கொள்ளப் படுவதுமில்லை. ஆனால்,

இலக்கிய வளம் பெற்ற எந்த இனமும் மற்றவர்களால் மதிக்கப்படுவதும் புகழப்படுவதும் காண்கின்றோம். இலக்கியத்தை உயிரினும் மேலாக எண்ணிப் பெருமிதங் கொள்வதையும் அறியலாம். உலகப் பெருவல்லரசுகளில் ஒன்றாகிய இங்கிலாந்து நாட்டில் வாழும் ஆங்கில இனத்தவர் தம் நாட்டு இலக்கியத்தை மதித்துப் போற்றிய தன்மையைக் காணுங்கள் : " **கதிரவனும் சாயாத எங்கள் பேரரசை இழந்தாலும் இழப்போம். ஆனால், எங்கள் இலக்கியத்தை ஒரு நாளும் இழக்க இசையமாட்டோம்** " என்பதாம். நாட்டினும் உயர்ந்ததாக இலக்கியத்தை ஏன் கருத வேண்டும் ? ஒரு நாட்டையோ, ஓர் இனத்தையோ அளந்து காட்டும் சிறந்த கருவி இலக்கியம் என்பதனாலன்றோ ? உலக நாகரிகத்திற் சிறந்த நாடுகள் அனைத்தும் இலக்கிய வளம் கொண்டிருந்தனவே. பழந்தமிழர் நாகரிகமே முதன் முதலில் பார் முழுதும் பரவி விளங்கியிருந்தது என வரலாறு அறிவிக்கின்றது. எகிப்திய நாகரிகமும், பாபிலோனிய நாகரிகமும், கிரேக்க நாகரிகமும், உரோம நாகரிகமும் தமிழர் நாகரிகத்தின் வழித்தோன்றிச் சிறப்பதற்குக் காரணம், அவ்வந் நாட்டு இலக்கியச் செல்வங்களேயாம். 'தமிழகம்' என்ற ஆராய்ச்சி நூலில், " எகிப்தியரும் பாபிலோனியரும் பொனீஷியரும் கிரேக்கருக்கு நாகரிகம் கற்பித்தவர். கிரேக்கருக்குக் கற்பித்தவற்றை உரோமர் அறிந்தனர். பின்னர், உரோமர் தாம் கற்றுக்கொண்டதை ஐபீரியர், கெல்ட்ஸ், டியூட்டன்ஸ், ஸ்லேவ்ஸ் முதலியோருக்குத் தெரிவித்தனர். இவ்வாறே உலகெங்கும் தமிழரிடமிருந்து நாகரிகம் பரவிற்று " எனக் குறிக்கப்பட்டுள்ளமை ஒப்பு நோக்கத் தக்கது. நாகரிகம், கலாச்சாரம், பண்பாடு என்பன ஒரு பொருளையுணர்த்தும் சொற்கள். இலக்கியமே சிறந்த செல்வமெனக் கொண்டிருந்த பழந்தமிழர் பண்பாட்டை இன்றும் பாராட்டிப் புகழ்கின்றோம்.

ஆகவே, மக்கள் பண்பாட்டை அடக்கிக் காட்டும் கண்ணாடி இலக்கியம் எனத் துணிந்து கூறலாம். இலக்கியம் என்பதற்கு மேனாட்டுக் கவிஞர்களும், பேராசிரியர்களும் திட்ப நுட்பமான விளக்கந் தந்திருக்கின்றார்கள். ' இலக்கியம் வாழ்க்கையின் கண்ணாடி ' என்றார் பெரியார் அட்சன். ' இலக்கியம் பண்பாட்டை ஆக்கும் சிறந்த கருவி ' எனறார் மதி நலம் படைத்த மார்லி. ' இலக்கியம் சிறந்த சிந்தனைப் பெட்டகம் ' என்றார் ஞானி எமர்சன். ' உலக முழுவதையும் மக்கட் பண்பினதாகச் செய்வதே இலக்கியம் ' என்றார் ஜெர்மானியக் கவிஞர் கெதே. சுருங்கக் கூறின், இலக்கியம் பண்பாட்டின் களஞ்சியம் என்னலாம்.

## பண்பாடு கண்ட தமிழினம்

மேனாட்டறிஞர் தந்த விளக்கங்களைக் கொண்டு தமிழ் இலக்கியங்களை ஆராய்ந்து பார்த்தால் மிகப் பொருத்தமாக இருப்பதை உணரலாம். சங்ககால இலக்கியங்கள் பண்பாட்டின் கருவூலங்களாக அமைந்துள்ளன என்பதற்கு எத்தனையோ சான்றுகள் காட்டலாம். சிந்தனைத் திறனுடைய புலவர்மணிகள் தம் வாழ்க்கையில் கண்ட அனுபவங்களைச் செப்பமுற அமைத்துப் பண்பாட்டை வளர்க்க உதவியுள்ளனர். தமிழ்ப் பெருமக்கள் இலக்கியத்தை அழியாச் செல்வமாக எண்ணி வாழ்ந்தமையும் காண்கின்றோம். இன்றும் ' எங்கள் வாழ்வும் எங்கள் வளமும் மங்காத தமிழ் ' எனப் பண்பாடிப் பெருமிதங் கொள்ளுகின்றனர். இலக்கியமே தமிழரின் வாழ்வும் வளமும் என்பது தெளிவாகின்றது. பண்பாட்டிற்கே முதலிடம் தந்து நின்றதால் தமிழர் நாகரிகம் உலகெங்கும் பரவியதாக வரலாற்றில் பொறித்தனர். எகிப்து பாபிலோனிய கிரேக்க உரோம நாகரிகங்கள் மறைந்து பட்ட நிலையிலும், தமிழர் நாகரிகம் மறைந்து போகா

மல் இன்றும் புகழப்படுவதைக் காண்கின்றோம். தமிழரின் நாகரிக வளத்தினை இன்றும் உலகத்திற்கு எடுத்தியம்புவது இலக்கியச் செல்வமேயாம். உலக நாகரிகத்தைப் பற்றி ஆராய்ந்த வங்காளப் பேராசிரியர் ஒருவர் கூறியுள்ளவற்றை ஊன்றி நோக்குங்கள் : "இந்தியாவின் கலாச்சாரமே உலகில் தலைசிறந்தது; அந்தக் கலாச்சாரத்தில் முக்கால் பங்கு தமிழருடையதாகும்" என்பதாம். உலகிற்கே கலாச்சாரத்தை வழங்கியவர்களாகக் கொள்ளப்படும் தமிழர், வடநாட்டிற்கும் கலாச்சாரம் வழங்கினர் என்பது வியப்பன்று. ஆனால், இந்தியாவின் வட பகுதியினர் தென்னாட்டினரிடமிருந்து முக்கால் பங்கு கலாச்சாரம் பெற்றனர் என்பதை ஒரு பேராசிரியர் வெளிப்படையாகக் கூறுவது வரவேற்கத்தக்கதாகும். கலாச்சாரத்தில் சிறந்தவர்கள் தமிழர்களே என்பதை ஸ்காட் எலியட் போன்ற மேனாட்டாசிரியர்கள் முன்னரே ஒப்புக்கொண்டுள்ளமையும் நினைத்தற் குரியது. இவ்வாறு மேனாட்டாசிரியர்களும், இந்திய நாட்டு அறிஞர்களும் பாராட்டும் அளவிற்குத் தமிழர்கள் வரக் காரணம் என்ன ? அவர்கள் பெற்றிருக்கும் பண்பாட்டுக் களஞ்சியங்களாகிய இலக்கியங்களல்லவா ? ஆழ்ந்து நோக்குமிடத்து இலக்கிய வளமே பண்பாட்டின் வளம்; பண்பாடே இலக்கியம் என்று சொல்லத் தோன்றுகின்றது. அவ்வாறாயின் இலக்கியத்தின் வித்து யாது என்பதை ஆய்ந்து காண்போம்.

### மக்கட் பண்பே இலக்கிய வித்து

இலக்கியமே பண்பாடு என்று அமைந்துள்ளமை கண்டோம். பண்பாடுடையன வெல்லாம் இலக்கியம் என்று கொண்டால், அல்லாதன இலக்கியம் எனக் கொள்ள முடியாதல்லவா ? அவை போலி இலக்கிய வரிசையில் அமையுமே தவிர, பண்பட்ட இலக்கிய

வரிசையில் ஒருகாலும் அமைதல் ஒல்லா. பண்பாடு என்ற சொல் தமிழ் மொழிக்கேயுரிய சிறப்புச் சொல்; பண்புகள் பலவற்றையும் ஒருங்கே யுணர்த்தும் பொதுச் சொல் எனவும் கூறலாம். பண்பு என்பதற்கு விளக்கங்கூற வந்த கலித்தொகை யாசிரியர், "பண் பெனப் படுவது பாடறிந் தொழுகல்" என்ருர். அஃதாவது, ஒருவன் தன் குடிப்பிறப்பிற்குரிய பண்பு களில் வழுவாது எல்லாரியல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகுதலாகும். இந்தப் பொருளிற் சிறிதும் மாறுபடா மல் வள்ளுவர் 'பண்புடைமை' என்ற அதிகாரத்துள் பத்துக் குறள்களை அமைத்துள்ளார். 'பண்புடைமை' என்ற தலைப்பிற்கு உரைவரையப் புகுந்த பரிமேலழகர் "பெருமை சான்ருண்மைகளில் தாம் வழுவாது நின்றே எல்லார் இயல்புகளும் அறிந்து ஒத்து ஒழுகு தல்; 'பண்பு எனப்படுவது பாடறிந்து ஒழுகல்' என்ருர் பிறரும்" என எழுதியுள்ளார். ஒருவன் நன் மக்களோடு ஒப்பாகக் கர்ண்பது நிலையில்லாத உடம்பினலன்று; நிலைத்த தன்மையுடைய பண்பினல் ஒப்பிட்டுக் காண்பதே சிறப்பாகும். பேரறிவு படைத்தவ ராயினும் நன்மக்கட்குரிய பண்பு இல்லையாயின், ஓரறி வுடைய மரத்திற்கு ஒப்பாவர். இந்தக் கருத்துக்கள் மக்கட் பண்பின் இன்றியமையாமையை வலியுறுத்து கின்றன. வள்ளுவர் பண்புடைமையின் மாட்சியை,

> *"உறுப்பொத்தல் மக்களொப் பன்ருல் வெறுத்தக்க*
> *பண்பொத்த லொப்பதா மொப்பு"*

> *"அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்*
> *மக்கட்பண் பில்லா தவர்"*

என்ற குறட்பாக்களால் காட்டியுள்ளார். மக்கட் பண்பு என்ற சொல்லைப் பாவிலே அமைத்திருப்பதை ஜெர்மன் கவிஞர் கூறிய இலக்கிய விளக்கத்தோடு ஒப்புநோக்குதல் வேண்டும். **"உலக முழுவதையும் மக்கட் பண்பினதாகச் செய்வதே இலக்கியம்"** என்ருர்

என்பதை மீண்டும் நினைவிற்கொள்க. அவ்வாறாயின் மக்கட் பண்பே இலக்கியத்தின் வித்து எனக் கொள்ளலாமன்றோ?

## மானமும் ஒழுக்கமும்

மக்கட் பண்பென்பது நன்மக்கட்குரிய பண்பென முன்பே கண்டோம். நன்மக்கட்குரிய பண்புகள் பலப் பல வள்ளுவப் பெருமானால் ஆராய்ந்து கூறப்பட்டுள்ளன. நன்மக்கள் என்பார், உயர்ந்த குடியின்கண் பிறந்தார். உயர்ந்த குடி எனப்படுவது, ஒழுக்கத்தாற் பழுத்த குடியாம். வள்ளுவரும் 'ஒழுக்க முடைமை குடிமை' என விளக்கந் தந்திருப்பது நோக்கத் தக்கது. 'குடிமை' என்று ஓர் அதிகாரத்தை ஒழிபியலில் முதன்மையாக அமைத்த வள்ளுவர், 'ஒழுக்கம்' என்ற அதிகாரத்திலும் அதனை வலியுறுத்தியிருப்பது சிந்திப்பதற்குரியதாம். அன்றியும்,

> "ஒழுக்கமும் வாய்மையும் நாணுமிம் மூன்றும்
> இழுக்கார் குடிப்பிறந் தார்"

என்ற குறளைக் 'குடிமை' என்ற அதிகாரத்தில் அமைத்து ஒழுக்கத்தின் மேன்மையைக் குறிப்பித்திருத்தலும் காணத் தக்கது. மக்கட் பண்புகளில் எது முதன்மையுடையதும் இன்றியமையாததும் எனக் காண்கின்றபோது ஒவ்வொருவரும் ஒவ்வொரு பண்பைக் குறிப்பார்கள். பண்புகளுக்கெல்லாம் வித்தாகிய பண்பைக் காண்பார், மற்றவர்கள் குறிக்கின்றவற்றை ஏற்றுக் கொள்ள மாட்டார்கள். பண்புகளிற் சிறந்தது ஒழுக்கமே என்பாரும், வாய்மையே என்பாரும், பொறுமையே என்பாரும், ஈதலே என்பாரும், சாண்றாண்மையே என்பாரும், நடுவு நிலையே என்பாரும் ஆகப் பலத் திறத்தவர் ஆவர். ஆனால், தமிழ் மறையாகிய திருக்குறளில் பண்புகட்கெல்லாம் வித்தாகவும்,

நன்மக்கட்குரிய தலைசிறந்த பண்பாகவும், உயிரீந்து பெறுவதாகவும் குறித்திருப்பது யாதெனின், மானம் என்ற பெறற்கரிய பண்பாம். மானம் என்ற தாயால் பேணி வளர்க்கப்படும் அழியாச் செல்வச் சிறார்களே மேலே சொல்லிய பண்புகளாம். பண்புகளில் உயிரினும் சிறந்தவைகளாக வள்ளுவரால் மதித்துக் கூறப்பட்டன இரண்டு : ஒன்று, ஒழுக்கம்; மற்றொன்று, மானம். ஒழுக்கத்தின் உயர்வைக் கூறவந்த வள்ளுவர்,

> " ஒழுக்கம் விழுப்பந் தரலான் ஒழுக்கம்
> உயிரினும் ஓம்பப் படும் "

என்றார். அதற்கு உரை கண்ட பரிமேலழகர், " உயிர் எல்லாப் பொருளினுஞ் சிறந்ததாயினும், ஒழுக்கம் போல விழுப்பந் தராமையின், 'உயிரினும் ஓம்பப்படும்' என்றார் " என எழுதினார். மக்கள் மிக உயர்ந்த, அழியாத பொருளாக எண்ணியிருப்பது உயிராகும். உயிரின்றேல் உடம்பின் இயக்கமில்லை. உடம்பை வைத்து உயிர் வாழ்ந்தபோதிலும் உயிரைக்கொண்டே உடம்பு செயல்படவோ, மதிக்கப்படவோ முடிகிறது, உயிர் நீங்கியதும் உடம்பைப் 'பிணம்' என்றும், 'சவம்' என்றும் இழிவாகக் கூறுவதைக காண்கிறோம். ஆனால், உயிர் உடம்பில் நிலைத்த விடத்தும், பிரிந்து சென்ற விடத்தும் உயிர் என்றே மக்களால் மதித்துப் பேசப்படுகின்றது. அதனாலேயே அறிவுடைப் பெருமக்கள் உயிரை, ' ஆருயிர் ' என்று போற்றினர். இத்தகைய உயிரினும் மேலாக ஒழுக்கம் என்ற பண்பு மதிக்கப்படுகின்றது. ஏன் ? உயிர் சில ஆண்டுகள் உடம்பின் கண்ணே தங்கிப் பிரிந்து விடுகின்றது. பிரிந்து சென்ற உயிரை இக் காலத்து விஞ்ஞானிகள் உடம்பிலே சேர்த்து உணர்ச்சியூட்டிச் சில நாழிகையாவது செயல்படச் செய்து விடுகின்றார்கள். மதிக்கத்தக்க உயிர் பிரியினும் மீட்டுவிட முடிகிறது விஞ்ஞானத்தின்

உதவியால் என்பது மறுக்க முடியாத உண்மை. ஆனால், ஒழுக்கத்திலே சிறிது குறைவு ஏற்பட்ட போதே உயர்குடியிலே பிறந்தவனாக இருப்பினும் இழிந்தவனாகக் கருதி ஒதுக்கப்படுகின்றான். ஒழுக்கத் தால் எத்துணை விழுப்பம் ஒரு மகனுக்கு உண் டாகுமோ, அத்துணை இழிவும் பழிப்பும் ஒருவனுக்கு ஒழுக்கந் தவறிய விடத்து உண்டாகின்றன. இழந்த பொருளை மீட்டு விடலாம். இழந்த பதவியைப் பெற்று விடலாம். இழந்த உயிரையும் சில நாழிகைவரை உடம்பிற்குக் கொண்டு வரலாம். ஆனால், இழந்துவிட்ட ஒழுக்கத்தை எத்தனை கோடி பொன் தரினும் மீட்டல் என்பது இல்லை. இழந்தது இழந்ததுதான்! இக் காரணம் பற்றியே வள்ளுவரும், 'ஒழுக்கம் உயிரினும் மேலான பண்பு' எனக் குறித்தார் போலும்! 'உயிரை விட மேலாக மதித்துப் போற்றி வைக்கப்படும் பொருள் ஒழுக்கம்' என்றார் வள்ளுவர். அது போன்றே, 'உயிரீந்து போற்றி வைக்கப்படும் பொருள் மானம்' என்றும் கூறியுள்ளார். 'மானம்' என்ற அதிகாரத்தில், கவரிமானின் மானவுணர் வோடு மானவுணர்வுடையாரை ஒப்பிட்டுக் காட்டும் வாயிலாக,

> *"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்*
> *உயிர்நீப்பர் மானம் வரின்"*

எனக் கூறியுள்ளார். கவரிமான் தன் உடம்பின்கண் உள்ள மயிர்த் திரளில் ஒரு மயிர் நீங்கினும், அதனைத் தாங்காது வருந்தி உயிர் வாழாது இறக்கும் தன்மை யது. அது போன்றே உயர்குடிப் பிறந்தோர் தம் நிலையில் தாழ்வு வருமானால் மானம் குன்றியதாக எண்ணி மேலும் வாழ விரும்பாமல் உயிர் நீத்து மானத்தை நிலைநிறுத்துவர். மானம் பெரிதா, உயிர் பெரிதா என்று கேட்கும் நிலையில் பரிமேலழகர், "உயிரும் மானமும் உடனில்லாமைக்கண், பின்னும்

போவதாய உயிரை நீத்து, என்ஞான்றும் நிற்பதாய மானத்தை எய்துவர்" என உரை வரைந்து மானமே பெரிதெனக் காட்டியுள்ளார். உயிர் சில ஆண்டுகள் உடம்பிலே நிலைத்துப் பிரிந்து போவது. ஆனால், மானமோ, என்றைக்கும் நிலைத்து நிற்கும் அழியாத் தன்மையது. உயிர் பிரிந்து போவதால் வருந்த வேண்டிய நிலை இல்லை. ஏன்? என்றைக்காவது ஒரு நாள் பிரிந்து போவதே. பிறந்தவர் இறப்பது உண்மை யன்றோ? ஆனால், மானம் குன்றுவதால் வரும் பழியோ துடைக்க முடியாதது; கறையாகி உள்ளத்தைக் கருக்குவது; உயிரைச் சிறிது சிறிதாய்க் குறைப்பது. மானம் குன்றியவிடத்து உயிர் நிலைத்த லில்லை. இந்த உண்மையை, 'உயிரும் மானமும் உடனில்லா' என அழகுபட உரையாசிரியர் கூறி யிருப்பது பாராட்டி மகிழ்வதற் குரியதாகும். ஆகவே, **உயிரைவிட மேலானது ஒழுக்கம்; உயிரைவிட மேலா னது மானம்.** ஒழுக்கத்தை உயிரைவிடப் பெரிதாகப் பாதுகாக்க வேண்டுமென்றார். ஆனால், மானத்தை உயிரீந்து நிலைநிறுத்த வேண்டுமென்றார். ஏனைய பொறுமை, நடுவு நிலைமை, சான்றாண்மை முதலிய பண்புகளை உயிரோடு ஒத்து யாண்டும் சுட்டினா ரில்லை. ஆகவே, பண்புகட்கெல்லாம் வித்தாகக் கொள்ள வேண்டுவது மானம் என்று ஒருவாறு துணியலாம்.

## மானப் பண்பே மக்கட் பண்பு

இலக்கியத்தின் வித்து மக்கட் பண்பு என்று கண் டோம். அந்த வித்து மானம் என்ற பெயருடையது. மானம் என்ற வித்தின் அடிப்படையிலே தோன்றிய இலக்கியம் என்ற ஓங்கி உயர்ந்த மரம் ஏனைய பண்புக ளாகிய கவடும் கோடும் காயும் கனியும் விளைத்துப் பயன் தருகின்றது என்னலாம். இந்தக் கருத்து பரிமேலழகருக்கும் வள்ளுவருக்கும் உடன்பாடுடையது

என்றும் கருதலாம். திருக்குறளிலுள்ள ஒழிபியற் பகுதியில் முதற்கண் 'குடிமை' என்ற அதிகாரத்தை அமைத்த வள்ளுவர், அடுத்தாற் போல 'மானம்' என்ற அதிகாரத்தை அமைத்திருப்பதும் தக்க சான்ருகும். அன்றியும், உரை வரையப் புகுந்த பரிமேலழகரும், 'மானம்' என்ற அதிகாரத்திற்கு அடைவு கூறும் போது பின்வருமாறு குறிப்பிடுவதும் மானம் என்ற உயர்ந்த மக்கட் பண்பே இலக்கியத்தின் வித்து என்று உறுதியாகக் கொள்வதற்கு இடமளிக்கின்றது.

"இனிக் குடிப் பிறந்தார்க்கு உரியவாய குணங்கள் கூறுவான் தொடங்கி, முதற்கண் மானங் கூறுகின்ருர். அஃதாவது, எஞ்ஞான்றும் தம் நிலையில் தாழாமையும், தெய்வத்தால் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம். இஃது அக் குடிப்பிறப்பினை நிறுத்துதலுடைமையின் அச் சிறப்புப் பற்றி முன் வைக்கப்பட்டது" எனக் குறித்திருத்தல் காண்க.

அதே அதிகாரத்தில் அமைந்துள்ள எட்டாவது குறட்பாவிற்குச் சிறப்புரை வரைகின்றபொழுது, மானத்தின் பெருமையையும் தலைமையையும் இன்றியமையாமையையும் பின்வருமாறு கூறுதலும் அதனை வலியுறுத்துவதாகும்: "நற்குணங்கட் கெல்லாம் இடனுதல் சிறப்புப் பற்றிப் பெருந்தகைமை என்றும், அவை யெல்லாவற்றுள்ளும் அதற்கு (குடிமை) வலியாதற் சிறப்புப் பற்றிப் பீடு என்றும், அஃது (மானம்) அழிந்தால் நின்ற வெற்றுடம்பு இழிக்கப்படுதலின் அதனை ஊண் என்றும், பின்னும் இறத்தல் ஒருதலை என்பார் மருந்தோ என்றும் கூறினர்" என வருதல் காண்க. நற்குணங்கட் கெல்லாம் தலைமையுடையது மானம்; உயர் குடிப்பிறப்பை நிலைநிறுத்தும் வலிமையுடையது மானம்; என்றும் பொன்ருத புகழைத் தருவது மானம். இத்தகைய பண்பே இலக்கியத்தின்

வித்தாக இருக்க முடியுமென்பது வள்ளுவர், பரிமே லழகர் போன்ற பெருமக்களின் முடிந்த கருத்தாம். திருக்குறட்கு விளக்கந் தருவதுபோல் அமைந்த நாலடியார் என்ற நீதி நூலும், பசிப் பிணியின் கொடுமையைக் கூறவந்த விடத்து, 'மானம் என்ற பண்பையும் கெடுத்துவிடும் இயல்பினது பசி' எனக் கூறியதோடன்றி, முதற்கண் மானம் என்ற சொல்லை யும் அமைத்து, "பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்" என முடித்திருப்பது அதன் தலைமையையும், இன்றி யமையாமையையும் குறித்தற்கேயாம். இவ்வாறே நாளுற்பதில் ஒன்ருகிய இனியவை நாற்பதில், "மானங்கெட வரினும் வாழாமை முன்னினிதே" என முதற்கண் மானம் என்ற பண்பை அமைத்துப் பாடியிருத்தலும் கருதத்தக்கதாம்.

## உலக வழக்கில் மானம்

செய்யுள் வழக்கிலே மானம் என்ற பண்பு ஏனைய பண்புகளுக்கெல்லாம் தாயாகவும், இலக்கியத்தின் வித்தாகவும் புலவர்பெருமக்கள் போற்றி வந்தமையை அறிந்தோம். அது போன்றே உலக வழக்கிலும் மானம் முதன்மையாகப் போற்றப்படுதலும், மானம் குன்றிய விடத்து உயிர் நீத்து அதனை நிலைநிறுத்தலும் நுனித்துணர்வார்க்குப் புலனுகும். வாழ்க்கையில் ஈடு பட்டு வாழ்பவர் தம் மக்களை நல்வழிப்படுத்தும் நோக் கத்தால் சுடுசொல் உரைப்பதும் உண்டு. தம்பால் கடன் பெற்றவர் காலங்கடத்துங்கால் அவரை நல் வழிப்படுத்தக் கடுஞ் சொல்லாற் கேட்டலும் உண்டு. தம் நண்பர்கள் பொறுப்பின்றி ஒழுகுங்கால் கடிந்து சில சொற்கள் கூறலும் உண்டு. அவ்வாறு திருத்த நினைக்கும் நல்லவர்கள் அன்பு

மொழியால் கூறுவதே மரபு. சில காலங்களில் திருத்த வியலாத சிலரைத் திருத்தும் இறுதிப் படைக்கலமாக ஒரு சொல்லை வைத்திருப்பர். 'அன்பில்லாதவனே, பொறுப்பில்லாதவனே, பண்பில்லாதவனே, பயனில்லாதவனே' என்றெல்லாம் கூறினும் உணர்வு வராத ஒருவனை, 'மானங் கெட்டவனே!' என்று கூறின், அவனுக்கு அந்த இடத்திலேயே பொங்கிவரும் சினத்திற்கு அளவில்லை. எத்துணை பேர் தடுப்பினும் நில்லான். அக் கோபத்தை அடக்குதலும் இயலாது. சில வேளைகளில் கொலைச் செயலில் சென்று முடிவதைக் காண்கின்றோம். குற்றங்களை மிகுதியாகவுடையவனும், குற்றமே சிறிதும் இல்லாதவனும், குறைவும் நிறைவும் உடையவனும், அறியாமைப் பருவமுடைய சிறுவனும், பருவமடையாத பெண்ணும், வயது முதிர்ந்த கிழவனும் இந்தச் சொல்லைக் கேட்டதும் கோபத்தால் பொங்கித் தம்மை மறந்த நிலையை அடையக் காண்கின்றோம். அச்சொல்லிற்கு அத்துணை ஆற்றலும், உள்ளத்தே ஊடுருவி உணர்வைத் தட்டி எழுப்பும் திறனும் எவ்வாறு வந்தது? பிற சொல்லால் கடிந்து சொல்லும்போது வாராத கோபம் இச் சொல்லைக் கேட்ட அளவில் வரக் காரணம் என்ன? பழகிய காரணமா, அன்றிப் பண்பில் தலைசிறந்த காரணமா என்பதைச் சிந்தியுங்கள். 'ஒரு சொல் வெல்லும்; ஒரு சொல் கொல்லும்' என்பது நாட்டுப் பழமொழி. 'மானங்கெட்டவனே' என்பதைக் கேட்டு மனம் பொறுக்காமல் நஞ்சுண்டிறந்தோர் எத்தனை பேர்? ஒரு முழக்கயிற்றிலே உயிரை ஊசலாட விட்டோர் எத்தனை பேர்? குளத்திலும் குட்டையிலும், ஆற்றிலும் ஆழியிலும் மூழ்கி மடிந்தோர் எத்தனை பேர்? பெண்களினத்தில் எண்ணற்றவர் இச் சொல்லைப் பொறுக்காமல் மடிகின்ற நிகழ்ச்சியை நாடோறும் காண்கின்றோம். அவ்வாறாயின் அந்தச் சொல்லிற்கு எத்துணைப் பெருமை தந்திருக்கிறார்கள்?

அந்தப் பண்பைக் காப்பதற்கு உயிரையும் பெரிதென மதிக்காத பேராண்மையை யன்றோ காண்கின்றோம்? அந்த அருமைப் பண்பே வாழ்வில் தலைமைப் பண் பெனக் கொண்டிருந்தமையும், இன்றும் கொண்டிருப் பதும் இலக்கியத்தின் வித்து என்பதற்குச் சான்றாகும். ஆகவே, உலக வழக்கிலும் செய்யுள் வழக்கிலும் எல்லாப் பண்புகளுக்கும் தலைமையாகவும், இலக்கி யத்தின் வித்தாகவும், உயிரை ஈந்தும் காக்கப்படும் அழியாச் செல்வமாகவும் உள்ளது மானம் என்ற உயர்ந்த பண்பு என்பது தெளிவாம்.

## இலக்கியத்தில் மானம்

தமிழ் மக்கள் தம் பெருமையிற் குன்றாது வாழ்வ தற்கு வழிகாட்டியாக உள்ளது இலக்கியம். இலக்கியம் மானம் என்ற பண்பை வித்தாகக் கொண்டிருப்பதை யுணர்ந்த தமிழர்கள், தம் வாழ்வின் வித்தாக அப் பண் பையே கொண்டு வாழ்ந்தனர் என்பதை இன்று நமக் குக் கிடைத்திருக்கும் தமிழ் நூல்களால் அறிய முடி கிறது. தமிழகத்தின் சட்ட நூலாக மதிக்கத்தகும் தேவர் மறையும், 'மானம்' என்றே ஒரு தனி அதி காரம் அமைத்துப் பேசுகிறது. சங்க நூல்களும் மானத்திற்கு உறைவிடமாக விளங்கிய மூவேந்தர் களையும் வள்ளல்களையும் புலவர்களையும் மகளிரையும் புகழ்ந்து கூறுகின்றன. இடைக்காலத்திலே தோன் றிய புராணங்களும், சிறு பிரபந்த நூல்களும் மானத் தின் மாண்பு குறித்து உரைக்கின்றன. பிற்கால நூல்களும், தற்காலப் புலவர்களும் மானத்தின் இன்றி யமையாமையை வலியுறுத்திப் பாடியுள்ளமையும் காணலாம். இவ்வாறு ஒவ்வொரு இலக்கியமும் மானம் என்ற பண்பு பற்றிப் பேசும் நிலை அழியாது தொடர்ந்து வந்திருப்பது அப்பண்பு இலக்கிய வித்து எனத் துணிவதற்கு இடமளிக்கின்றது. தமிழிலக்

கியங்களில் மானம் போற்றப்பட்டு உயிர்ப் பண்பாக அமைந்துள்ளமையை உறுதியாக்கச் சில சான்று களைக் காட்டுவோம்.

## புறநானூற்றில் மானம்

சங்க மருவிய நூல்களில் மானவுணர்வு வெளிப் படையாக விளங்கும் பாடல்களையுடையது புறநானூறு என்பதாம். அதன்கண் பண்டைத் தமிழரின் ஈகையும் வீரமும் இரு கண்கள்போல் விளங்கின என்பதை ஒவ் வொரு பாடலும் எடுத்துரையாநிற்கின்றது. ஈகைத் தன்மையும்,வீரத்தன்மையும் நிகழ்வது மானவுணர்ச்சி யின் அடிப்படையிலே என்பதும் உய்த்துணர்வார்க் குப் புலனாகும். இந்த உணர்ச்சியை மிகுதியாகக் கொண்டு வாழ்ந்த தமிழ் வேந்தர்களிற் சிறந்தோர் மூவராகக் குறிக்கப்படுகின்றனர். அம் மூவரும் மானத் திற்குக் குறைவு வந்தவிடத்து வாழ விரும்பாமல் தம் முயிரை நீத்தனர். அம் மூவருள் முதன்மையாகக் குறிக்கப்படும் தமிழ்ப் புலமை வாய்ந்த வேந்தனே சேரன் கணைக்கா லிரும்பொறை. அம் மன்னன் தன் மானப் பண்பை மற்றவரும் அறிந்தொழுக அமைத்து விட்டுச் சென்ற புறப்பாடலே அதற்குச் சான்றாகும்.

தமிழ் நாட்டு வேந்தர்கள் தம் ஆண்மையை நிலை நிறுத்தும் பொருட்டுப் படை கொண்டு சென்று போர் புரிதல் உண்டு. அவ்வாறே சோழன் செங்கணான், சேரமான் கணைக்கா லிரும்பொறையுடன் திருப்போர்ப் புறம் என்ற விடத்திலே போர் செய்தான். சோழனும் சேரனும் போர்செய்தபின் சேரன் பற்றுக்கோட்பட் டான். செங்கணான், சேர வேந்தனைக் குடவாயிற் கோட்டத்தே சிறை வைத்திருந்தான்; தன்னைச் சங் கிலியாற் பிணித்து நாய்போல் தெரு வழியே இழுத்து மானக் குறைவுண்டாக்கிய நிலையை நினைந்து நினைந்து உள்ளம் உடைந்தான்; உண்ணாதும் உறங்

காதும் சிறையிற் கிடந்து புலம்பித் தன் வீரம் குன்றியமைக்கு நாணி வருந்தினன்; சிறைகாவலர்பாற் வேட்கைதணிக்க நீர் கேட்டான். நீர் கொணரப்பட்டது. உண்ணும் நீரைப் பெற்ற சேரன் உள்ளம் பெரிய போராட்டத்தால் குழம்பியது. 'பகைவனிடத்து நீர் கேட்டுப்பெற்று உண்டு மானமில்லாதவனாக உயிர் கொண்டு வாழ்வதற்கா இத் தமிழுலகில் என்னைப் பெற்றுப் போயினர்' எனச் சிந்தித்தான்; பகைவன் தந்த நீரை உண்பதினும் உயிர் போக்கி மானத்தைக் காப்பதே மாண்பாகும் என்ற முடிவிற்கு வந்தான்; மானத்தை மாநிலம் அறியும் வண்ணம் அருந்தமிழ்ப் பாடல் ஒன்றை யாத்துவிட்டு, மாய்ந்துவிட்டான். புறப்பாடல்கள் எல்லாமழிந்து இந்த ஒரு பாடல் மட்டும் இருந்தாலும் ஒரு தனி நூலாக அமைத்துப் போற்றுவர் தமிழ்ப் பெருமக்கள். அத்துணைச் சிறந்த வித்தாக விளங்கும் பாடலை இவண் வரைந்து காண்பது நலம் பயப்பதாகும்:

" குழவி யிறப்பினும் ஊன்தடி பிறப்பினும்
ஆளன் றென்று வாளின் தப்பார்
தொடர்ப்படு ஞமலியி னிடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறுபதம்
மதுகை யின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாமிரந் துண்ணு மளவை
ஈன்ம ரோஇவ் வுலகத் தானே."*

பண்புகட்கெல்லாம் தலைமைப் பண்பாக விளங்கும் மானம் மன்னரால் எவ்வாறு மதிக்கப்பட்டு வந்தது என்பதற்கு இதனினும் சான்று வேண்டுமோ? வள்ளுவப் பெருந்தகை 'இரவச்சம்' என்ற அதிகாரத்தின்கண்,

* புறநானூறு, 74.

" ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்கு
இரவின் இளிவந்த தில் "

என அமைத்த குறட்பாவை ஈண்டு நினைவு கூர்தல் வேண்டும். 'இரவச்சம் என்பது, மானந்தீர வரும் இரவிற்கு அஞ்சுதல்' எனப் பரிமேலழகர் விளக்கங் கூறியுள்ளார். ஒருவன் தனக்கு நீர் வேண்டுமெனக் கேட்டலே நாவிற்கு இழிவு. ஈன்ற தாய் பசித் துன்பத்தால் வருந்துங்காலத்துக் கேட்டலும் இழிவு. அறவுள்ளங் கொண்டு ஆவிற்கு நீர் வேட்கை தணிக்கப் பிறர்பால் நீர் கேட்டலும் இழிவு. இவ்வாறு தனக்கோ, தன் தாய்க்கோ, பிற உயிர்க்கோ பிறர்பால் இரத்தல் மானத்திற்கு இழுக்காகும் என வள்ளுவரின் பொன்னுரைகளை அறிந்த வேந்தன், நீர் இரந்து உண்பதைப் பெருமை எனக் கருதுவனோ? ஒரு நாளும் கருதமாட்டான் என்பது வெளிப்படை. ஈண்டுச் சேர வேந்தனும் பகைவன்பால் நீர் பெற்று வாழ்தலை இழிவெனக் கருதி உயிர் நீத்தமை காண்கின்றோம். ஏன்? மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம். மன்னன் தன் பண்பிற் சிறிது குறைந்தவிடத்து மாநில மக்களும் பண்பிற் குறைவரன்றோ? எவ்வழி மன்னவன் ஒழுகுகின்றானோ, அவ்வழி மக்களும் ஒழுகுவர். மன்னனைக் காணில் தெய்வமாக மதித்துப் போற்றியதும் இக் காரணம் பற்றியேயாம். நாட்டில் அறம் வாழ்வதற்கும் பண்பு நிலைப்பதற்கும் காரணமாகிய வேந்தன், மானத்தினின்றும் இழுக்கி வாழ்தல் இயலவில்லை. மானமே பெரிதெனக் கருதித் தன்னைத் துறந்து புகழ் நிறுவினான். அன்று மன்னர் மரபிலே நிலைத்த மானப்பண்பு, இன்றும் மக்கள்பால் நிலைத்து வாழ்வதும் அதனால்தான் என்பது தெளிவாகின்றது. இந்தப் பண்பு புறப்பாட்டின் வித்தாக விளங்கிச் சேர வேந்தனை இறவாப் புகழுடையவனாக்கி நம்மை மறவாது போற்றச் செய்கின்றதன்றோ?

சேரன் கணைக்காலிரும்பொறை மானங்காத்த மன்னனாக விளங்கியது போன்றே சேரன் பெருஞ் சேரலாதனும் தன் மானமழியாமல் உயிர் நீத்த செய்தி உருக்கந் தருவதாக உள்ளது. வெண்ணிப் பறந் தலைப் போர் வரலாற்றுச் சிறப்புடையது. சோழன் கரிகாற் பெருவளத்தானும் சேரன் பெருஞ் சேரலாத னும் போர் புரிந்து இருவரும் வெற்றிப்புகழ் எய்தி யமை காணலாம். 'இருவீர் வேறலும் இயற்கையு மன்றே' எனக் கோவூர்கிழார் ஓரிடத்துக் கூறி யது நினைவுறற்பாலது. போரில் ஒருவர் தோற்பதும் ஒருவர் வெற்றி பெறுவதும் இயறகை. இருவரும் வெற்றிபெறுதல் இயலாததே. ஆனால், இயற்கை மொழியையும் வென்று வெண்ணிப் போர்க்களத்திலே இருவரும் வெற்றிபெற்றனர் என்பதைக் காண்கின் றோம். சோழனும் சேரனும் வெண்ணிப் போர்க்களம் சென்று சந்தித்தனர். நீண்ட நேரம் போர் புரிந் தனர். எவர் வெல்வார் எனக் கூற முடியாதவாறு ஆண்மை காட்டி நின்றனர். இறுதியாக, கரிகாலன் எறிந்த வேல் சேரலாதன் மார்பைத் துளைத்து நின் றது. முதுகின் புறத்தே புண்ணுண்டாயதற்கு மிக வருந்திய சேரன் புறப்புண் எனக் கருதி வடக்கிருந்து உயிர் போக்கினான். கரிகாலன் வெற்றி பெற்றதைப் புலவர் பாராட்டுதற்கு முன் சேரலாதன் மனத்தாற் பெற்ற வெற்றியைப் பாராட்டினர். கழாத்தலையார் என்ற புலவர் பெருஞ்சேரலாதன் வடக்கிருந்தமைக்கு வருந்தி,

> "தன்போல் வேந்தன் முன்பு குறித்தெறிந்த
> புறப்புண் ணாணி மறத்தகை மன்னன்
> வாள் வடக்கிருந்தனன் ஈங்கு
> நாள்போற் கழியல ஞாயிற்றுப் பகலே."

என மனமுருகிப் பாடினர். வெண்ணிக் குயத்தியார் என்ற பெண்பாற் புலவரும் கரிகாலனினும் சேர லாதன் போற்றுவதற்குரியவன் என்பதை,

" ...............கரிகால் வளவ!
வென்றோய் நின்னினும் நல்ல னன்றே
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புக ழுலக மெய்திப்
புறப்புண் ணாணி வடக்கிருந் தோனே"

எனப் பாடியுள்ளமை நினைவுகூரத்தக்கது. வெற்றி பெற்று உயிரோடு வாழும் வேந்தனைவிட மானத்தைக் காக்க உயிர் நீத்த மன்னன் மாண்புடையன் என் பதைப் புறம் கூறுகிறது.

## சிலப்பதிகாரத்தில் மானம்

இளங்கோவடிகள் மானப் பண்பின் உச்ச நிலை யினைத் தம் காப்பியத்தில் இரண்டிடங்களில் அமைத் துள்ளமை அறியற்பாலதாகும். முப்பெரும் வேந்த ரின் ஒப்பிலாப் பெருமையை உணர்த்தும் வாயிலாக மதுரைக் கோமான் ஆரியப்படை கடந்த நெடுஞ் செழியனைப் பற்றிக் குறிப்பிடுகின்றார். நீதி தவறாத பாண்டியர் மரபிலே வந்த நெடுஞ்செழியன் நீதி தவறு கின்றான். வணிகத்தின் பொருட்டு வந்த கோவலன் கொலைப்படுகின்றான். அவனது கற்புத் தெய்வமாம் கண்ணகி அரண்மனைக்குப் போந்து அரசனோடு வழக் காடுகின்றாள். 'கள்வன் உன் கணவன். கள்வனைக் கோறல் கொடுங்கோலாகுமோ?' எனக் கூற, 'என் கணவன் கள்வனல்லன் என்பதை எனது காற்சிலம் பால் உறுதிப்படுத்துவேன்' என மறுத்துரைத்தாள். மன்னனும் இசைந்தான். கோப்பெருந்தேவியின் காற்சிலம்பில் உள்ள பரல்கள் முத்துக்கள். கண்ணகி யின் காற்சிலம்பிலுள்ள பரல்கள் மணிகள். கண்ணகி யின் காற்சிலம்பு உடைத்ததும் மணி தெறித்தது. மன்னன் கண்டு மதிமயங்கினான்; தன் தவற்றை யுணர்ந்தான்; 'பாண்டிய மரபிற்குத் துடைக்க முடி

யாத பழியைக் கொணர்ந்தேனே, இனி யான் உயிர் வாழ்வதா ?' என எண்ணியவனாய்,

*" ......................மணிகண்டு,*
*தாழ்ந்த குடையன், தளர்ந்த செங்கோலன்:*
*'பொன்செய் கொல்லன் தன்சொற் கேட்ட*
*யானோ அரசன்? யானே கள்வன்!*
*மன்பதை காக்கும் தென்புலங் காவல்*
*என்முதல் பிழைத்தது! கெடுகவென் னாயுள் '"*

என அரியணைமீதிருந்து அடியற்ற மரம்போல் வீழ்ந்து உயிர் நீத்தான். தம் நிலையில் தாழாமையும் தெய்வத்தான் தாழ்வு வந்துழி உயிர் வாழாமையும் என்பதன்றோ மானம். அந்த மானப் பண்பினை நிலை நிறுத்த மாய்ந்து காட்டிய பாண்டிய மன்னனைத் தமிழகம் பாராட்டிப் பெருமை கொண்டது. தண்டமிழ்ச் சாத்தனார் வாயிலாக மதுரை மன்னன் மாண்டொழிந்த செய்தி கேட்ட சேரர் பெருமான் செங்குட்டுவன் மனம் வருந்தியவனாய், பாண்டியன் நீதி தவறினான் என்ற பழிச் சொல் சென்று பரவுமுன் மானத்தால் மடிந்தான் என்ற சொல் முந்திப் பரவியது. தீவினையால் வளைக்கப்பட்ட செங்கோல் மன்னவன் உயிரால் நிமிர்க்கப்பட்டது எனப் பாராட்டும் வாயிலாக,

*" வல்வினை வளைத்த கோலை மன்னவன்*
*செல்லுயிர் நிமிர்த்துச் செங்கோலாக்கியது "*

என இளங்கோவடிகள் அழகுபட அமைத்திருப்பது இன்பந் தருவதாகும். தம் நிலையில் தாழ்ந்தவிடத்து வாழார் பாண்டியர் என்பதை உறுதிப்படுத்தினான் தமிழ் மன்னன். அந்த மானப் பண்பே இலக்கிய வித்து என இளங்கோவடிகளும் கருதினார் போலும் !

மதுரைக் காண்டத்திலே மானப்பண்பை உச்ச நிலைப்படுத்திய அடிகளார் வஞ்சிக் காண்டத்திலும் செங்குட்டுவன் வாயிலாக அமைத்துத் தம் காப்பியத்தை உணர்ச்சி மிக்கதாக ஆக்கியுள்ளார். சேரன் செங்குட்டுவன் மலைவளங்காணத் தன் தேவியாகிய வேண்மாளுடன் சென்ருன். பேரியாற்றங்கரையிடத்தேயுள்ள வெண் மணற் குன்றிலே தங்கி, இயற்கை இன்பத்தைப் பருகியிருந்தான். அவ்விடத்தே அரசன் எழுந்தருளியதறிந்த மலைவாணர் காணிக்கைப் பொருளெலாம் தலைமிசைத்தாங்கி வந்து வைத்து வணங்கிக் கண்ணகி வான்வழி சென்று வானகம் புக்க செய்தியை வியப்புடன் தெரிவித்தனர். அப்பொழுது உடனிருந்த சாத்தனுர் கோவலன் கொலையுண்டது முதலாகிய செய்திகளை எடுத்துரைத்தனர். செங்குட்டுவன் பாண்டியன் தேவிக்கும் கண்ணகிக்கும் நிகழ்ந்த அவல முடிபை அறிந்து வருந்தியவனுய்த் தன் மனையாளாகிய வேண்மாளிடம், 'யாருக்குப் படிவம் சமைத்து வழிபடுவது ?' என வினவினுன். தேவியும், 'நம் அகல் நாடு அடைந்த பத்தினிக் கடவுளைப் பரசலே தக்கது' என விடை கூறினள். வேண்மாளின் வேண்டுகோளின்படி இமயப் பெருமலையிற் கல் எடுக்கச் செல்வதை வடநாட்டு வேந்தர்க்கு அறிவிக்கப் பணித்தான். செங்குட்டுவன் வஞ்சி நகர் மீண்டு அரியணையில் கொலு வீற்றிருந்த காலை இமயமலையினின்றும் போந்த முனிவர்கள்,

*" பால குமரன் மக்கள் மற்றவர்*
*காவா நாவிற் கனகனும் விசயனும்*
*விருந்தின் மன்னர் தம்மொடுங் கூடி*
*அருந்தமி ழாற்றல் காண்குதும் யாமெனக் "*

கூறி நகைத்த செய்தியை உரைத்தனர். அதுபோழ்து கண்கள் சிவக்கப் பெற்றவனுய், " அவர்கள்

பேசிய வார்த்தைகள் என்னைச் சாராது பிறரைக் குறிப்பதாலும், அஃது எம்போல் வேந்தர்க்கு இகழ்ச்சிதருவதாகும். வடவரசரின் முடித்தலை நெரியக் கடவுளெழுதக் கற்கொண்டல்லாமல் வறிது மீளேன்'' என வஞ்சினம் கூறும் வாயிலாக மானப் பண்பை உச்ச நிலையிற் காட்டும் அருமையைக் காண்கின்றோம். வஞ்சினங் கூறிய சேரன் வட நாடு சென்று நூற்றுவர் கன்னர் பணிந்து வரவேற்க, ஆரிய மன்னர்களை இரை வேட்டெழுந்த அரிமாப்போலப் பாய்ந்துழக்கிக் கொன்று ஒழித்துக் கனகவிசயர் இருவரையும் சிறைப் படுத்தி நீர்ப்படை செய்த கல்லைச் சுமந்து வருமாறு செய்த வீரம், அவன் மானத்தின் மாண்பினை உணர்த்துவதன்றோ ?

## கற்பனைக் கதையில் மானம்

இவ்வாறே ஒரு சிற்றரசன் மானவுணர்வு மிக்க வனாக விளங்கியதாக, பின்னாளில் ஒரு வரலாற்றோடு கூடிய கதை வழங்கி வருகின்றது. கொங்கு நாட்டை ஆண்ட மன்னர்களுள் ஒருவன் வணங்காமுடி என் பான். அவன் பிற சிற்றரசர்களை யெல்லாம் தன்னடிப் படுத்தி ஆட்சி புரிந்து வந்த மகமதிய மன்னனுக்கு அடிபணியவும், திறை செலுத்தவும் மறுத்துவிட்டான். ஏனைய குறுநில மன்னர்கள் அம் மகமதிய அரசற் குப் பணிந்து வாழ்வதைக் கேட்டு மனம் புழுங்கினான். அவர்களையும் திறை கொடுக்கவேண்டா மெனவும் கூறினான். தலைவனைப் படையுடன் உய்த்து வணங்கா முடியை விலங்கிட்டுக் கொணருமாறு பணித்தான். படைத்தலைவன் சென்று வணங்காமுடியைச் சிறைப் படுத்தினான். அரசன்முன் கொண்டு நிறுத்தினான். வணங்காமுடியிடம் 'என்னைப் பணிந்து திறை செலுத்த ஒப்புக்கொண்டால் இப்பொழுதே விடுவிப் பேன்' எனக் கூறினன் மன்னன். 'பகைவரைப்

பணிந்து மானங்கெட வாழ்வது இதுவரை எம்மர பிற்கு இல்லை' என வணங்க மறுத்து விட்டான். அதனால் வணங்காமுடியைச் சிறையிலிட்டனர்; சித்திரவதை செய்தனர்; உணவீயாது வதைத்தனர்; இனியாவது, 'எம் மன்னனைப் பணிந்து வாழ்க' என்றும் அறிவித்தனர் ஏவலர்கள். மானப்பண்பை உயிரென மதிக்கும் எவரே பணிவர்? வணங்கா முடிக்கு அவர்கள் கூறியவையெல்லாம் வெற்றுரை யாகக் காணப்பட்டன. 'இத்துணை இன்னலையும் பொறுத்துப் பணியாத உறுதியுள்ளம் கொண்ட குறுநில மன்னன் எவனையும் இதுகாறும் யான் கண்டிலேன். இவனை மீண்டும் சோதித்துப் பார்ப் போம்' எனக் கருதினன் அவ் வரசன். அவன் சிந்தனை யில் ஒரு கருத்துத் தோன்றியது. வணங்காமுடியை அடைத்திருக்கும் சிறைக்கோட்டத்தின் கதவினை மாற் றிச் சிறிய நிலையும் கதவும் அமைத்துவிட வேண்டும் என்றும், அவனுக்கு விடுதலைச் சீட்டை அனுப்பி வெளியே வரும்போது குனிந்து வரும் வாயிலாக வணங்குமாறு செய்ய வேண்டும் என்றும் முடிவு செய் தான். அதன்படியே அதிகாரிகளுக்குக் கட்டளையிட, ஆவன செய்தனர். சிறைக் கோட்டத்தினுள்ளே இருக்கும் வணங்காமுடியிடம் விடுதலைச் சீட்டுக் கொடுக்கப்பட்டது. அரசன் அச்சிறைவாயிலின் முன்னர் நின்றுகொண் டிருந்தான். இவை யாவும் தன்னைப் பணிய வைப்பதற்கு மன்னன் செய்யும் சூழ்ச்சிகள் என்று கருதினன். விடுதலைச் சீட்டைப் பெற்றுச் சிறை வாயிலில் குனிந்து போகாமல் முதலிலே தனது இரண்டு கால் களையும் நீட்டி அதன் பிறகு வணங்காத தலையனைய் வெளியே வந்து நின்றான். வணங்காமுடி கால்களை நீட்டி, வெளியே நின்ற தன்னை இழிவுபடுத் தியதைக்கூட நினையாமல் அவன் அடிபணியாத மானப்பண்பைக் கண்டு மதிமயங்கி வியந்து நின்றான்

மகமதிய மன்னன். இத்தகைய மான முடையவனே என்றும் கிடைத்தற்கரிய துணையாவான் என எண்ணி அவன் நாட்டை அவன்பால் ஒப்படைத்துத் திறை செலுத்தாத உரிமையும் தந்து நட்புக்கொண்டான். உலக வழக்கிலே வழங்கப்படும் கற்பனை கலந்த கதையாயினும் பண்புகட் கெல்லாம் வித்தாக மானம் விளங்கியிருந்தது என்பது உண்மையாகின்றதன்றோ ?

## சங்கப் புலவர் போற்றிய மானம்

வேந்தர்கள், குறுநில மன்னர்கள் மானப்பண்பை வித்தாகக் கருதி வாழ்ந்தது போன்றே அப் பண்பை அறிவுறுத்திய புலவர் பெருமக்களும் மானங் குன்றா மாண்பினராய் வாழ்ந்தமையும் நாம் பரக்கக் காணமுடிகிறது. இலக்கியத்தின் வித்தாக மானப்பண்பு விளங்க வேண்டும் என்ற நன்னோக்கம் புலவர் பெருமக்கள் உள்ளத்திலே ஊறிப் பரந்திருந்தது. மானப் பண்பில் சிறந்தவர்கள் மன்னர்கள் மட்டுமல்லர் ; மாண்புமிக்க புலவர்களும் அப்பண்பிற் சிறந்தவர்களே என்பதை உலகம் அறியுமாறு ஒழுகிய புலவர் செம்மல் பெருஞ்சித்திரனாராவர். அவர் புலவர்களுக் குள் மிக்க பெருமிதம் உடையவர் ; வறுமையினும் செம்மை குன்றாத வாய்மையாளர். ஒரு முறை பரிசில் பெறும் பொருட்டு வெளிமான் என்ற வள்ளல்பால் சென்றார். இல்லை யென்று சொல்லா வள்ளியோன் அவன். புலவர் சென்றகாலை வெளிமான் நோய் வாய்ப்பட்டிருந்தான். எனினும், என்றும் போல் வரவேற்று இன்னுரையாடினன். புலவர்க்கு விருந்தூட்டப் பணித்துப் பரிசில் உதவ ஆணையிட்டனன். புலவர் தம் குடும்பத்தின் வறுமையை முழுதும் தீர்த்துக் கொள்ளும் காலம் அண்மியது என மனமகிழ்ந்திருந்தார். வெளிமானோ புலவர்க்குப் பரிசில் தரு

வதற்கு முன் உயிர் நீத்தான். தம்பி இளவெளிமான் பால் சொல்லிய முறைப்படி பரிசில் தருவான் என எதிர்பார்த்த சித்திரனார் ஏமாற்றமடைந்தார். தம் தகுதிக்கேலாத பரிசினை இரந்து வந்தார்க்குக் கொடுப்பதுபோல் மதியாமல் கொடுத்தான். அப் பரிசிலைப் பெறுவது தம் மானப்பண்பிற்கு இழுக்கா கும் எனக் கருதி, அதனைப் பெறுமலே சென்று விட்டார். தமிழகத்தின் தலைக் கொடையாளியாம் குமணன்பால் சென்றார். தம் வறுமையை விளங்கக் கூறினார். வரையாதீயும் வள்ளல் அவ் வறுமையைக் கேட்கப் பொருதவனாய் மனவிரக்கம் கொண்டு வழங் கிய யானையையும் பொன்னையும் பரிசிலாகப் பெற்ற சித்திரனார் அதன்கண் அமர்ந்து வெளிமானூர்க்கு வந்து சேர்ந்தார். அவனுடைய காவன் மரத்தில் தாம் பரிசிலாகப் பெற்ற யானையைக் கட்டிவிட்டு இளவெளிமான்பால் சென்றார். “இனியாவது நீ தெரிந்து கொள்ளவேண்டும். புலமையை மதித்துப் பரிசில் தருபவன் நீ ஒருவன் மட்டுமல்லன்; தமிழகத் தில் எம் போன்ற புலவர்களின் தகுதி யறிந்து கொடுக்கும் புரவலர்கள் உளர். எம் பரிசிலாகக் கும ணன்பால் பெற்ற யானையை நின்னூர்க் கடிமரம் வருந்தப் பிணித்துள்ளேன். யான் விடை கொள்ளு கின்றேன்” எனக் கூறித் தம் மானத்தோடியைந்த பெருமிதப்பண்பைக் காட்டியுள்ளமை அறியலாம். புலவர் பெருமக்கள் வேந்தர்களின் அவையத்தும் நெஞ்சு நிமிர்ந்து நடத்தலுண்டு என்பதைக் கோவூர் கிழார் சுட்டியிருத்தலும் இவண் ஒப்பு நோக்கற்பால தாகும்.

## கம்பர் வாழ்வில் மானம்

சங்க காலப் புலவர்கள் மானமே பெரிதென எண்ணிக் காத்தமை போன்றே இடைக்காலத்தே

அவர்களினத்தவரும் வாழ்ந்துள்ளனர் என்பது தனிப் பாடல்களால் விளங்குகின்றது. கவிஞர் பெருமானாகிய கம்பர் சோணாட்டு வேந்தன் அவைக் களத்தை அணி செய்தகாலை அரசனுக்கும் தமக்கும் ஓர் உரையாடல் காரணமாக மனக் கசப்புண்டாக மானத்தின் எல்லையில் நின்று அவனை இடித்துக் கூறி, அவன் நாட்டை விட்டு வெளியேறினார். அப் பொழுது அரசன் நாணமுறும் வண்ணம், "மன்னன் நீ ஒருவனுமல்லன் இத் தமிழகத்தில் என்பதை உணர்ந்துகொள். உனது சோழநாடு மட்டும் வள முடைய நாடு என எண்ணிவிடாதே. யான் எனது தாய்த் தமிழைக் கற்றதும் உன்னைக் கருதியன்று என் பதை இன்றுவது தெரிந்துகொள். கற்ற புலவர்க்குச் சென்றவிடமெல்லாம் வரவேற்றுச் சிறப்புச் செய்யக் காத்திருக்கிறது தமிழகம். உனது நாட்டை விடுத்து இன்று பிற நாட்டில் காலடி வைத்தால் விரைந்தோடி வந்து ஏற்றுக்கொள்ள இருக்கின்றனர் நற்றமிழ் மன்னர். குரங்கை ஏற்றுக்கொள்ள மாட்டேன் என மறுக்கும் கொம்பு இருக்குமானால், புலவரை ஏற்றுக் கொள்ள மாட்டேன் எனக் கூறும் தமிழரசரும் இருப்பர்" எனப் பெருமிதத்தோடு கூறிச் சோழ நாட்டை விட்டுச் சென்றதாக வழங்கும் பாடல் ஒன்று காணப்படுகின்றது. அது வரலாற்று அடிப்படைக்கு நிற்கக் கூடாதாயினும், அப் பாடல் புலவர் பெருமக் கள் சங்ககாலத்திற் போலவே மானப்பண்பை வித் தாகக் கொண்டு போற்றியமைக்குச் சான்றாகும். சோழன்பால்,

*"மன்னவனும் நீயோ? வளநாடும் உன்னதோ?*
*உன்னையறிந் தோ தமிழை ஓதினேன்?—என்னை*
*விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ? உண்டோ*
*குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு?"*

என்று கம்பநாடர் கூறியதாக அமைந்த அருமைப் பாடலால் அறியலாம்.

**பாரதிதாசன் காட்டும் மானம்**

சங்க காலப் புலவர்களும் தம் வாழ்விற் கண்ட மானப் பண்பை இலக்கியத்தில் வடித்துச் சென்றாற் போலவே இருபதாம் நூற்றாண்டில் தோன்றிய கவிஞர்களும் தம் கவிதைகளில் அப்பண்பைப் பல இடங்களில் அமைத்து உணர்ச்சியூட்டியுள்ளனர். 'புரட்சிக் கவி' என்ற தலைப்பையுடைய கவிதை, 'பில்கணீயம்' என்ற வடமொழி நூலைத் தழுவி யாக்கப்பட்டதாகும். அந்தக் கவிதை அகவல், வெண்பா, விருத்தம் முதலிய யாப்பு வகைகளிலும் சிந்து, கும்மி முதலிய இசைப்பாடல் வகைகளிலும் அழகுற யாத்துப் படிப்பார் இடையிலே சோர்ந்து நிறுத்தாமல் இறுதி வரையிலும் படித்து முடிக்க வேண்டுமென்ற ஆர்வத்தை யுண்டுபண்ணும் தன்மையில் அமைந்துள்ளது. சுவைமிக்க காதலை அடிப்படையாகக் கொண்டெழுந்த புரட்சிக் கவிதையாதலால், கவிஞர் அதற்குப் 'புரட்சிக் கவி' என்றே தலைப்பிட்டுள்ளார். தமிழ் நாட்டு மன்னர் ஒருவனுக்கு வாய்த்த ஒரே மகள் அமுதவல்லி என்னும் ஆரணங்காவாள். அவள் இலக்கண இலக்கியங்களை ஆய்ந்து கற்றவள்; பிற மொழிப் பயிற்சியும் உடையவள்; நீதி நூல்களையும் ஒழுக்க நூல்களையும் வரையறுத்துப் பயின்ற திறமையள்; இயற்கையழகைக் கண்டு இன்புறும் பெற்றியள். ஆதலால், கவிதை புனையக் கற்றுக் கொள்ள வேண்டும் என்னும் அவாவினைத் தன் தந்தைபால் தெரிவித்தாள். அரசனும் தன் அருமை மகள் விருப்பத்தை நிறைவேற்றும் நோக்குடன் அமைச்சரை அழைத்தான். யாப்பு இலக்கணம் கற்றுத்தரும் புலவனொருவன் வேண்டும் என்றுரைக்க,

"உலகம் போற்றும் கவிஞன் உதாரன், உனது மகட்குத் தக்க ஆசான். அவனுக்கிணையான புலவர் இந்நாட்டில் இல்லை. ஆனால், அவன் இளமையும் அழகும் வாய்ந்தவன். குலமகளைக் கற்க விட்டால் குறைவரினும் வருமே என அஞ்சுகிறேன்" என அடக்கத்துடன் மறுமொழி கூறினான். அரசனும் இசைந்தான். அமைச்சர் உதாரனை அழைத்து வந்தனர். அரசன் தன் மகட்குக் கவிதை யியற்றக் கற்றுத் தர வேண்டும் என்ற வேண்டுகோளைப் பைந்தமிழ்த் தொண்டு செய்யக் கிடைத்த வாய்ப்பு என எண்ணி மகிழ்ந்து ஏற்றுக்கொண்டான். அமுதவல்லிக்கும் உதாரனுக்கும் இடையே திரை அமைக்கப்பட்டது. அமுதவல்லியிடம் உதாரனுக்குப் பிறவிக் குருடு என்றும், கவிஞனிடம் அமுதவல்லிக்குத் தொழுநோய் உளது என்றும் கூறியிருந்தனர். நெருப்பும் மெழுகும் போன்றவர் இளமையுள்ள முடைய ஆணும் பெண்ணுமன்றோ? அரசன் மகள் குருடனைப் பார்த்தல் தகாது என்ற முறையை மேற்கொண்டு உதாரனைப் பார்க்காமலிருக்கச் சூழ்ச்சி செய்தனர். அரசன் மகளின் கற்புக்குத் தீங்கு நேராதிருக்க இளமைத் தன்மையுடைய கவிஞனுக்கு அரசன் மகளைக் காண முடியாவாறு சூழ்ச்சி செய்தனர். நாடோறும் யாப்பு முறையுரைப்பதும், பாப்புனைந்து பார்ப்பதும் நிகழ்ந்து வந்தன. ஒரு நாள், அமுதவல்லி அரண்மனை மேடையில் இருந்தாள். உதாரன் அங்கு நின்று முழுநிலாவை இமை கொட்டாமல் பார்த்து விழியால் பருகி மனம் குளிரக் கவிதை அமைத்துப் பாடினான். அமுதவல்லி அவ்விசையினைக் கேட்டு, 'குருடனுக்கு எவ்வாறு முழு நிலவைக் கண்டு பாடவியலும்?' என்று நினைத்தாள்; குரல் வந்த திசை நோக்கி விரைந்தாள்; உதாரனை நோக்கினாள்;

*" ஏதிது போன்ற ஓராண் எழில்—குறை*
*இன்றித் திருந்திய சித்திரம் ?*
*சோதி நிலாவுக்கும் மாசுண்டாம்—இச்*
*சுந்தரனோ கறை ஒன்றிலான் "*

என்று வியப்புடன் பார்த்து நின்றனள். ஏந்திழையாள் எதிர்நிற்றலைக் கண்ட கவிஞன் தன்னை மறந்தவனாகி,

*" கன்னல் தமிழ்க்கவி வாணரின்—உளக்*
*கற்பனையே உருப் பெற்றதோ ?*
*பொன்னின் உருக்கிற் பொலிந்ததோ ?—ஒரு*
*பூங்கொடியோ ? மலர்க் கூட்டமோ ?"*

என வியந்து, 'அமுதவல்லியன்றோ' என்றான். அவளும், 'அரசரும் அமைச்சரும் நமைப் பிரித்திடும் கருத்தால் உன்னை நாட்டம் இல்லாதவன் என்று கூறினர்' என்றாள். அவனும், 'முன் செய்த தீவினையால் உனக்குத் தொழுநோய் வந்து மூண்டதென உரைத்தனர்' என்றான். இவ்வாறு இருவரும் ஒருவரையொருவர் கண்டு அளவளாவிக் காதல் கனிந்து நின்றனர். கவிஞனோ, அவள் காதலை உலகம் ஏற்காது என மறுக்கின்றான். அரசியோ, காதலுக்குச் சாதி இல்லை என்று காரணங் காட்டுகின்றாள். இருவரும் உளத்திற் புகுந்து ஒருவராயினர் என்று சொல்லவும் வேண்டுமோ? அமுதவல்லி காதல் நோயால் தாக்குண்டதைத் தோழிமார்கள் அறிந்தனர். அரசனுக்கு அறிவியாதிருப்பின் கொடுந்தண்டனைக்கு ஆளாக நேரிடும் என அஞ்சியவர்களாய் அரசன்பால் மிக்க பணிவோடு தெரிவித்தனர். ஒருநாள் இரவில் அரசன் அரண்மனைக்கண்

மறைந்து நின்று அவ் விருவர் காதல் நாடகத்தையும் கண்டனன்; ஆயிரந்தேள் மண்டையில் மாட்டியது போல் மனமுளைந்தான்; உதாரனை இழுத்து வருமாறு ஆணையிட்டான்; தன் வாளிற்கு நஞ்சினைப் பூசி வைத்தான். உதாரனை முன் கொணர்ந்து நிறுத்தினர். "இன்றைக்கு நின் தலை அற்றது; உன் உடற் சதையைப் பல கூறிட்டு நரிதின்னக் கொடுப்பேன்" என்று கண்களில் தீப்பொறி பறக்கக் கடுமொழிகளை வீசினான். "அடியேன் செய்த பிழையொன்றுமில்லை; அமுதவல்லிக்குள்ள இன்னலை மறந்து விடாதே" என உரைத்தான் கவிஞன். 'இருவரும் காதற் சிறகடித்துக் களிப்புடன் நிற்றலை என் கண்களால் பார்த்த பிறகும் பொய் சொல்கின்றனையா? என் ஆட்சியிலேயே உனது குடியை வேரோடு பெயர்த்திட விதித்து விட்டேன்' என்று வெஞ்சின உரை பகர்ந்தான். அரசன், 'இவனைச் சிரச்சேதம் செய்க' என்றான். அக்குரல் கேட்டதும் அமுதவல்லி ஓடிவந்தாள். 'இலை உனக்கதிகாரம்; அன்னான் இழைத்த பிழை ஒன்றுமில்லை; என்னை வருத்தவும் உனக்கதிகாரமில்லை. ஊர் மக்களிடம் உரைப்பதே கடன்' என்று அரசன்பால் கூறி உதாரனை ஆவி சேர்த்துக் கட்டி அணைத்துக் கொண்டாள். இருவரும் கொலைக்களத்திற்குக்கொண்டு போகப்பட்டார்கள். ஊர்மக்கள், அதிகாரிகள், அமைச்சர்கள், அரசன் அனைவரும் ஒருங்கே கூடினர். கடைசியாகப் பேசவிரும்பியதைப் பேசுக என்று பணித்தனர். கவிஞன் கூட்டத்தாரிடையே தன் கடைசி வணக்கத்தைத் தெரிவித்துப் பேசலானான். அந்தப் பேச்சிலே உயிரை வெல்லம் போல் மதிக்கும் மாந்தரைப் போல் அல்லாமல் மானமே பெரிதென மதித்து உயிர் துறக்க எண்ணும் கவிஞனின் உயர்பண்பைக் காணலாம்.

"தமிழ்ப் பெருமக்களே! அரசனுக்கும் எனக்கும் ஒரு வழக்குண்டு. அவ்வழக்கைப் பொதுமக்கள்

தீர்ப்பதே முறை என்றேன். அரசனே ஒப்புக் கொள்ளவில்லை. இருவரும் சாவது என்று தீர்ப்பளித்தான். இங்கே சாவதன் பொருட்டே வந்துள்ளோம். ஒரு மனிதன் தேவைக்குத்தான் இந்தத் தேசமா? அப்படியானால் இந்தத் தேசம் அழிவது நன்றன்றோ? இன்னும் கேண்மின்! தமிழ் மொழியைக் கற்ற காரணத்தால் என்னை அழைத்தான். தன் ஒரே மகளுக்குக் கவிதை சொல்லிக் கொடுக்குமாறு பணித்தான். அவ்வாறு பயிற்றுகின்றபோது தமிழ்க் கவிஞன் என்று என்னையும் அவள் காதலித்தாள். காதல் இருவர் உள்ளத்தும் அரும்பிக் கனிந்தது. வேந்தன் கள்ளமில்லாக் காதலர்களாகிய எங்களைக் கருவறுக்கத் தீர்மானித்தான். என் உயிர் போய் விடுமே என்பதற்காக யான் அஞ்சவில்லை. என் உயிர் பிரிவதற்குக் காரணமாக இருந்தது தமிழ் என்று சமுதாயம் நினைக்குமே என அஞ்சுகின்றேன். அப்படி நினைத்து என் தாய்த் தமிழுக்குப் பழி வந்தால் அப் பழியினை நீக்கமுடியுமோ? ஒரு கவிஞன் தன் தாய் மொழிக்குப் பழியுண்டாக்கினான் என்ற பழிச்சொல் வரக்கூடாது. அதன் பொருட்டு உங்களை வேண்டிக் கொள்வது ஒன்றுளது. மாசில்லாத உயர் தமிழை உயிர் என்று போற்றுங்கள்" என்று கூறிப் பழிக்கு அஞ்சும் மானவுணர்ச்சியைக் காட்டுகின்றான் கவிஞன். புரட்சிக் கவியில் எளிய சொல்லில் கேட்போர் கிளர்ந்தெழும் வண்ணம் பாடிய அடிகளை மனத்தே பதித்துத் தமிழுணர்ச்சி கொள்ளுதல் இளந்தமிழரின் தலையாய கடமையாகும். அவ் வருமைப் பாடலை ஈண்டு வரைவாம்:

" தமிழறிந்த தால்வேந்தன் எனைஅழைத்தான் ;
தமிழ்க்கவியென் றெனையவளும் காதலித்தாள்
அமுதென்று சொல்லுமிந்தத் தமிழ்என் னாவி
அழிவதற்குக் காரணமா யிருந்த தென்று

*சமுதாயம் நினைத்திடுமோ ? ஐய கோ ! என்*
*தாய்மொழிக்குப் பழிவந்தால் சகிப்ப துண்டோ ?*
*உமைஒன்று வேண்டுகின்றேன் : மாசில் லாத*
*உயர்தமிழை உயிரென்று போற்று மின்கள் !''*

தன்மானமிழத்தல் தன் தாய்மொழிக்குப் பழியுண் டாக்குதல் என்று ஒரு கவிஞன் எண்ணியதாகக் காட்டும் அழகு மிக்க கவிதையை நமக்கு யாத்துத் தந்தவர் புரட்சிக்கவி பாரதிதாசனவர்கள். அவர்களும் இலக்கியத்தின் வித்தாக மானப் பண்பை அமைத் துள்ளமைக்கு ஒரு சான்று மேலே காட்டினோம்.

இரண்டாம் நூற்றாண்டு இலக்கிய முதலாக இருப தாம் நூற்றாண்டு இலக்கியங்கள் வரையும் மானப் பண்பு வித்தாக அமைந்துள்ளமையைக் கண்டோம். புலவர் பெருமக்களின் மானப்பண்பு இலக்கிய வாயி லாக அறிய முடிந்தது போன்றே உலக வழக்கு வாயி லாகவும் அறிய முடிகின்றது. பல சான்றுகளைத் தொகுத்துச் சுட்டலாம். ஈண்டுக் கதையோடு தொடர்புடைய வரலாற்று நிகழ்ச்சி யொன்றை மட் டும் சுட்டுவோம்.

**பாவால் மானங்காத்த பாவலர்**

தமிழ் நாட்டு வேந்தன் ஒருவன் சிறந்த நினை வாற்றலுடையவன் ; நல்ல தமிழ்க் கற்றவன். தன் னைப் போன்றே தமிழறிவும் நினைவாற்றலும் மிக்க அமைச்ச னொருவனையும் படைத்தலைவ னொருவனை யும் ஆராய்ந்து அமைத்துக்கொண்டான். மூவரும் நாடோறும் உரையாடுதலும், தமிழ்ப் பாடல்களை விளக்கியுரைத்து மகிழ்தலும் வழக்கம். இவர்கள் தங் கள்பால் வருகின்ற புலவர் பெருமக்களை வரவேற்றுப் பாக்கள் புனையுமாறு செய்து பரிசு வழங்குவர். ஒரு

நாள் புலவர்களை யெல்லாம் அரசன் தன் அவைக்கு வருமாறு அறிவித்திருந்தான். பொற்கிழி ஒன்றைக் கட்டிச் சிறந்தோர்க்குப் பரிசு வழங்கத் திட்டமிட்டிருந் தான். அவையிலே தாம் பாடிய பாடலைக் கொணர்ந்து அரங்கேற்ற வேண்டும் எனவும், பிறர் பாடலாக இருப்பின், சிறையிலடைக்கப்படுவர் எனவும் தெரி வித்திருந்தான். புலவர்கள் இரவு பகலாக முயன்று நல்ல கவிதைகளை எழுதிக்கொண்டு அரசவை யடைந் தனர். ஒவ்வொருவராகத் தம் பாடலைப் பாடிக் காட்ட, அசரன், அமைச்சன், படைத்தலைவன் மூவரும் 'இவை பழைய பாடல்' என்று கூறி, அவற்றை ஒரு சிறிதும் வழுவாமல் திரும்ப ஒப்புவித்தனர். பாடலை இயற்றிய புலவர்கள் ஒன்றும் சொல்ல வியலாதவர்களாய் நாணி நிற்பதும், அவர்களை அரசன் சிறையிலடைப்பதும் நிகழ்ந்தன. சிறையிலடைபட்ட புலவர்கள் மன மாழ்கி உண்மைக்கும் அழிவு வந்ததே என்று கூறி உறங்காதிருந்தனர். அரசன் அளித்த உணவையும் உண்டாரிலர். 'அரசன் யாம் பாடி வந்த பாடலை ஒருமுறை கேட்டதும் ஒப்புவிக்கின்றான். அரசன் ஒப்புவித்த இரண்டாம் முறை கேட்டதும் ஒப்புவிக் கின்றான் அமைச்சன். படைத்தலைவன், அமைச் சன் ஒப்புவித்த மூன்றாம் முறை கேட்டதும் வழுவின்றிப் பாடலை ஒப்புவிக்கின்றான். இஃதென்ன மாயமோ, மந்திரமோ அறிய முடியவில்லை! தந்திரத் தால் இவ்வளவு பாடல்களையும் ஒப்புவித்தல் இய லாததே யாம்' என்று எண்ணினர். ஒரு முடிவுக்கும் வரவியலாமல் சோர்ந்த உள்ளத்தவராய் இருந்தனர். புலவர்கள் தோல்வியை ஒப்புக்கொண்டு பரிசுபெற்றுச் செல்லலாமென்று ஏவலர்கள்பால் சொல்லி அனுப் பினான். மானம் சிறிதென்றெண்ணி வாழ்வு பெரி தென்றெண்ணும் ஈனர்களென்றெண்ணி விட்டான் வேந்தன். தமிழன் பெருமையும் மானவுணர்வும் எத்தகையன என்பதை அறியான் போலும்!

*" மானம் பெரிதென உயிர்விடுவான்*
*மற்றவர்க் காகத் துயர்ப்படுவான்*
*தானம் வாங்கிடக் கூசிடுவான்*
*தருமமே மேலெனப் பேசிடுவான் "*

என்பதன்றோ தமிழ் மகன் பண்புகள் ? உண்மையைக் கண்டாலல்லது உண்ணுதலோ, உறங்குதலோ கூடாது என உறுதிகொண்டனர் கவிஞர்கள். அந்த நேரத்தில் முதிர்ந்த வயதுடைய கவிஞர் எழுந்து, ' இன்று அனைவரையும் விடுவிக்க ஒரு பாடல் எழுது வேன். அரசனுக்கு இதனைச் சொல்லியனுப்புவோம்' என்றார். யாவரும் வரவேற்றனர்; எனினும், விடு தலை பெறுவோம் என்ற நம்பிக்கை கொண்டாரிலர். மறு நாள் புலவர்கள் அனைவரும் அரசவையில் கூடினர். அரசனும் அமைச்சனும் படைத்தலைவனும் ஆங்கு வீற்றிருந்தனர். முதுமைப் பருவத்தரா யிருந்த புலவர் எழுந்து பணிவோடு ஒரு பாடலை அவையின்கண் பாடினார். அரசன் விழிக்கத் தொடங் கினான். ஒரே தடவை கேட்டவுடன் சொல்லும் ஆற்றல் படைத்தவன் இப் பாடலைச் சொல்ல முடிய வில்லை. அமைச்சனும் ஒன்றுந் தோன்றாமல் நாண முற்றான். படைத்தலைவன் பதுமை போல் அசை வற்றுத் தலைகவிழ்ந்தான். புலவர்கள், பாடல்களைக் கேட்டு, 'நாம் மீண்டும் சிறையிலடைபடுவதைத் தவிர வேறு வழியில்லை ; இப் புலவரை நம்பி வந்தோமே' என்று வருந்தினர். அரசன் முதுபெரும் புலவரை அருகே அழைத்து மீண்டுமொருமுறை பாடக் கேட்டான்; மூன்றாம் முறையும் பாடுமாறு சொல்லி உற்றுக் கேட்டான். திரும்ப ஒப்புவிக்கவோ, பழைய பாடல் என்று சொல்லவோ முன்வரவில்லை. பரிசிலாக வைத்த பொற்கிழியைக் கொடுத்துப் பாராட்டினான்; புலவர்கள் அனைவரையும் பாராட்டி அமுதமொழி கூறினான்; பரிசுகள் வழங்கியதோடு பொறுத்தருளு

மாறும் வேண்டிக்கொண்டான். புலவர் பெரு மக்களோ தம் மானப்பண்பு அழியாது காத்த முதிய வரை வணங்கினர். அவர்களனைவரையும் விடுவிக்கக் காரணமாக இருந்த கவியரசர் ஒட்டக்கூத்தரின் பாடலை மறவாது போற்றினர். அடுக்கிய சொற்களும் முடுக்கியல் நடையும் இன்னோசையும் அமைந்த அருமைப் பாடலே நம் மானத்தை அழியாமல் காத்தது என்று அகமிக மகிழ்ந்தனர்! அப் பாடலே,

" விக்கா வுக்கா வித்தா விப்போய்
விட்டால் நட்டார் சுட்டூர் புக்கார்
இக்கா யத்தா சைப்பா டுற்றே
இற்றே டிப்போய் வைப்பீர் நிற்பீர்
அக்கா டப்பேய் தொக்கா டச்சூல்
அப்பா டத்தீ வெப்பா டப்பூண்
நெக்கா டக்கா னத்தா டப்பேர்
நெய்த்தா னத்தானைச்சே வித்தே "*

என்பதாம். எதுகையும் மோனையும் இன்னோசையும் முடுகியலும் அமைந்திருந்தமையே அரசன் முதலிய மூவராலும் எளிதிலே பதிக்க வியலாமல் போயினமையாம். அன்றியும் புலவர் மணிகள் இப் பாடலால் விடுதலை பெறவும் காரணமாயிற்று என்பதாம். மானப்

*'விக்கித் தளர்வுற்று உயிர் உடலைக் கடந்து போய்விட்டால், உறவினர் பிணத்தைப் புதைத்துவிட்டு ஊருக்குள் போய்விடுவர். இவ் வியல்புடைய உடம்பிலே பற்று வைத்துச் செல்வத்தைத் தேடி வீட்டிலே சேர்த்துவைப்பீரே! தாம் அணிந்துள்ள எலும்பு மாலை அசையவும், பேய்கள் ஒன்றுபட்டுக் கூத்தாடவும், சடையிலுள்ள கங்கை யசையவும், திருக்கையிலுள்ள செந்தீயானது அசையவும், காதணிகள் நெகிழ்ந்து ஆடவும், அந்தச் சுடுகாட்டிலே நடம் செய்கின்ற அப் பெருமை வாய்ந்த நெய்த்தானம் என்னும் திருப்பதியில் வீற்றிருக்கும் சிவபெருமானை வழிபட்டு நிலையான கதியைப் பெற்று உய்வீராக ' என்பது இப் பாடலின் பொழிப்புரை ஆகும்.

பண்பைக் காத்தற்பொருட்டே கவியரசர் இப் பாடலை யாத்தனர் போலும் !

மானம் என்ற பண்பை வேந்தர்களும் பிறரும் உயிர்ப் பண்பு எனக் கருதி வாழ்ந்தனர் என்பதைச் செய்யுள் வழக்கிலும் உலக வழக்கிலும் கண்டோம். ஆண்மக்களே யன்றிப் பெண்டிரும் மானப் பண்பைக் காத்து நின்றமை இலக்கியங்களில் காணக் கிடக்கின்றது.

**மறத்தால் மானங் காத்த மங்கையர்**

கோப்பெருந்தேவி, பாண்டியன் தன் தவற்றை யுணர்ந்து மண்ணிற் புரண்டு கிடந்தவுடனே தன்னுயிர் கொண்டு அவன் உயிர் தேடினள் போன்று மானம்பொறாமல் இறந்து விட்ட இரங்கத் தக்க செய்தி சிலம்பிலே வரையப்பட்டுள்ளது. கணவரைப் பிரிந்து வாழ்வது தம் மானத்திற்குக் குறைவு எனக் கருதி உயிர் நீத்த கற்புக் கரசியர் கணக்கிலாதவர்கள். பூதப்பாண்டியன் தேவியார் மன்னன் வீர மரணம் எய்திய செய்தி கேட்டுத் தீப்பாய்ந்தமை மிகவும் உருக்கந்தரும் செய்தியாகும். இவ்வாறே தமிழ் நாட்டு வீரர்களின் பெண்டிரும் கணவரை இழந்து வாழ விரும்பாது மானத்தால் உயிர் நீத்தனர் என்பதும் அறியக் கிடக்கின்றது. மறக்குடியிற் பிறந்த பெண்டிர் தம் நாட்டுப்பற்றின் காரணமாகக் கூறும் வீரவுரைகள் புறப்பாடல்களால் அறியக் கிடக்கின்றன. தமிழ்ப் பெண்டிரின் மானவுணர்ச்சியின் உயர் நிலைக்கு இவண் ஒரு நிகழ்ச்சியினை வரைவாம்.

**தமிழ்க் கிழவியின் மானம்**

தமிழ் நாட்டு மறவர்கள் சேர்ந்து வாழும் ஊர் ஒன்று இருந்தது. அவ் வூரிலே ஒரு சிறிய குடிசை

வீடு அமைந்திருந்தது. வேலும் வாளும் கேடயமும் குந்தமும் வரிசையாக வீட்டிலே தொங்க விடப்பட்டிருந்தன. அப் படைக்கலங்கள் மின்னலைப் போன்று ஒளிவீசிக்கொண் டிருந்தன. அந்தக் குடிசையிலே அழகில்லை ; ஆனால், வெண் கொக்கின் இறகு போன்ற நரைத்த தலையினையுடைய கிழவிமட்டும் இருந்தாள். உடலிலே சுருக்கம் காணப்பட்டது ; ஆனால், உள்ளத்திலே சுருக்கமில்லை என்பதை அவள் முகம் காட்டிக்கொண் டிருந்தது. குடிசையின் வாயிலில் அமர்ந்து நிலவின் ஒளியில் சோற்றுருண்டையைக் கையாலெடுத்துப் பொக்கை வாயில் போட்டாள். அந்த நேரத்தில் இளமையுடைய வீரனொருவன் பெருமூச்சு வாங்க ஓடி வந்து முன்னே நின்றான். 'பாட்டி!' என்று அழைத்து, 'ஒரு செய்தி கொண்டு வந்தேன்' என்றான். 'உன் மகன் களத்தில் மடிந்தான் ; முதுகிலே புண்பட்டது' என்று சொல்லிவிட்டு மறைந்தான். 'ஐயோ! மறத் தமிழ்க் குடிக்கு மாசு இழைத்தானே ; அவன் மான மற்ற மரபிலா பிறந்தான் ? அவ்வாறு முதுகிலே புண் பட்டிறந்தானேல் பால் உண்ட என் மார்பை அறுத் தெறிவேன்' என்று சினந்து போர்க்களம் நோக்கி நடந்தாள். அவ்வாறு செல்லும் பொழுது தன் குடிப் பெருமையையும், மகன் செய்த சிறுமையையும் தமிழ்க் குடியின் மானப் பண்பையும் நினைந்து நினைந்து வருந்திப் புலம்பினாள். அந்தப் புலம்பலை நாம் புறப் பாடலிலே காண முடியாவிடினும், அப் பாடலை அடியொற்றி எழுதப்பட்ட உரைப்பாடலால் அறிந்து அகங்குழைய முடிகிறது. அந்த உரைப் பாடலாவது :

" கிழவி துடித்தனள் இதயம் வெடித்தனள்
வாளை எடுத்தனள் முழவு ஒலித்த
திக்கை நோக்கி முடுக்கினள் வேகம்
கோழைக்குப் பால் கொடுத்தேன்
குப்புற வீழ்ந்து கிடக்கும்
மோழைக்குப் பெயர் போர் வீரனும்
முன்பொரு நாள்,
பாய்ந்து வந்த ஈட்டிக்குப்
பதில் சொல்ல மார்பைக் காட்டிச்
சாய்ந்து கிடந்தாரென் சாகாத கண்ணாளர்,
அவருக்குப் பிறந்தானா அடடா! மானமெங்கே?
குட்டிச் சுவருக்கும் கீழாக வீழ்ந்து பட்டான்
**இமய வரம்பினிலே வீரம் சிரிக்கும்; இங்கு**
**வீணை நரம்பினிலே இசை துடிக்கும்.**
**அதுவும்**
**மானம் மானம் என்றே முழக்கும் "**

என்பதாம். வாளேந்திப் போர்க்களம் செல்லும் கிழவியின் கூற்றிலே மானம் முழங்குதலைக் காண்கிறோம். மறத்தின் அடிப்படையிலே தோன்றிய மானவுணர்ச்சிக்கு இதனினும் சான்று வேண்டுமோ? வாளினையேந்திச் சென்றவள் வையகத்தைப் பிடிக்கச் சென்ற வேந்தனைப் போல் காணப்பட்டாள். பிணக் குவியல்களைக் கண்டாள். அவற்றின்மீது அச்சம் சிறிதுமின்றிப் பீடுடன் நடந்தாள். வாளினால் செந்தமிழ்க் காளைகளைப் புரட்டினாள். மணக் கோலத்திலும் அடையாத மகிழ்ச்சி அடைந்தாள். மகனைப் பெற்ற காலத்தினும் மிக்க மகிழ்ச்சியை எய்தினாள். ஏன்? ஈட்டிக்கு மார்பு காட்டி இன்முகத்தோடு இறந்து கிடந்தான் மகன். அவனை வாளால் புரட்டியபோது மார்பில் விழுப்புண் பட்டிருந்தமை கண்டாள். ' அந்தோ!

அவன் குடித்த மார்பை அறுத்தெறிய நினைத்தேன். என்னிடம் பொய்யுரைத்த கயவனின் நாக்கை இரண்டு துண்டாக்குவேன்' என வீட்டை நோக்கி விரைந்தாள். இந்தக் காட்சி உள்ளத்தை அள்ளும் வீரக் காட்சி! மானப் பண்பை முதுமையிலும் மறவாத மறக்குடிப் பெண்ணின் காட்சி! இலக்கியத்தின் உயிரோட்டமாகவும் வித்தாகவும் மானம் விளங்குகிறது என்பதற்கு இவ் வருமை நிகழ்ச்சியொன்றே போது மன்றோ!

மறத்தின் அடிப்படையிலே மானங் காத்த மகளிர் போன்றே தம் கற்பின் அடிப்படையிலே மானங் காத்த பெண்டிரும் வாழ்ந்து வந்தனர் என்பதை இலக்கியங்களால் அறிகின்றோம். கற்புக் கடம் பூண்ட கண்ணகியின் வரலாறே அதற்குத் தக்க சான்றாகும். இளங்கோவடிகள் இருவகைக் கற்பினையும் தம் காப்பியத்தில் அமைத்துப் பாராட்டினார். பாண்டியன் தேவி, 'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்' என்று கூறி உயிர் நீத்தது அறக் கற்பாகும். கண்ணகி தன் கணவன் கள்வனல்லன் என்று வழக்காடி வென்று எரியூட்டியது மறக் கற்பாகும். செய்யுள் வழக்கில் எத்தனையோ நிகழ்ச்சிகளை நாம் அறிந்து மகிழலாம். உலக வழக்கில் அத்தகைய நிகழ்ச்சிகள் மிக அருமை. அவ் வருமையினும் அருமையாகக் கிடைத்த நிகழ்ச்சியொன்றை இவண் எழுதுவது இன்பந்தருவதாகும்.

### கற்பால் மானங் காத்த காரிகை

ஆங்கில அரசாட்சி தமிழகத்தில் நிலவியிருந்த போது கற்பின் அடிப்படையில் மானத்தை நிலைநிறுத்தினுள் ஒரு தமிழ்ப் பெண். அவள் இற்றைக்கு முப்பத்தைந்து ஆண்டுகட்கு முன் வாழ்ந்தவள். கண

வனும் மனைவியுமாக அவள் தாய் வீடு சென்றுவிட்டு வண்டியில் திரும்பி வந்துகொண் டிருந்தனர். அழகும இளமையுமுடைய மணமக்கள் இருவரும் இரட்டை மாடுகள் பூட்டிய வண்டியில் மெத்தை விரிப்பில் அமர்ந்து மகிழ்ச்சியுரையாடி யிருந்தனர். காளைகள் இரண்டும் கழுத்திலே கட்டப்பட்ட மணி ஒலிக்க விரைந்து சென்றன. வண்டி யோட்டும் மனிதனும் நல்ல வலிமையும் நெஞ்சுறுதியும் உடையவன். பெண் தன் உடம்பெங்கும் பொன்னணிகளைப் பூட்டியிருந் தாள். செல்வக் குடும்பத்தைச் சேர்ந்தவளாதலால் வண்டியில் பிறபொருள்களும் கொண்டு போவதற் காக வைக்கப்பட்டிருந்தன. நல்ல பகற் பொழுதிலே புறப்பட்டு உரிய காலத்திலே ஊர் சேர்ந்து விடும் நோக்குடன் வேகமாக வண்டி சென்றுகொண் டிருந் தது. வல்ல நாட்டுப் பக்கத்திலே ஒரு பாதை. வண்டிகளும் கார்களும் செல்லும் பாதை அது. மக்கள் நடமாட்டமும் இருக்கக் கூடியது. அந்தப் பாதையின் இடையே ஒரு மேடான இடம் ஒன்றுண்டு. ஒரு புறத்தே வருகின்றவர் மறு புறத்தே வருகின்ற வரைப் பார்க்க முடியாது. பாதையின் இரு மருங்கும் மரங்களும் பாறைகளும் உள்ளன. அந்த வழியில் உள்ள மேடான இடத்திற்கு அந்த வண்டி வந்து சேர்ந்தது. மேட்டிலிருந்து வண்டியானது மெது வாகக் கீழே இறங்கி வர வேண்டும். வண்டிக்காரன காளைகளைத் தட்டிக் கொடுத்து மேட்டிலிருந்து கீழே இறங்க எண்ணிய சமயத்தில் எதிரிலே ஒரு மனிதன் இருபது அடி தூரத்தில் வந்துகொண் டிருந்தான். அந்த மனிதனைக கண்ட வண்டிக்காரன் தலை தெறிக்கு மாறு குதித்து ஓடினான். வண்டியிற் பூட்டப்பட்ட காளைகள் மருண்டுவிடும் எனக் கருதி, எதிரிலே வந்த மனிதன் பாய்ந்து வந்து இரண்டு மாடுகளின் கயிறு களையும் பற்றி இரண்டு உருளைகளிலும் கட்டி விட்டான். வண்டியினுள்ளே இருந்த அந்தப்

பெண்ணின் கணவனும் வந்த மனிதனை அருகிலே வரக்கண்டு வாய்பிதற்றிக் குதித்து ஒரு திக்கிலே விரைந்து ஓடினான். உள்ளே இருந்த பெண் ஒன்று மறியாதவளாய் வந்த மனிதனைப் பார்த்தாள்; நடுங்கினாள். அணிந்திருந்த நகைகளை யெல்லாம் ஒன்று விடாமல் கழற்றித் தன் எதிரில் நிற்கும் மனிதன் காணுமாறு வைத்தாள். வைரத்தோடு முதலாக காலணி ஈறாக எல்லா நகைகளும் குறைந்தது பத்தாயிர மதிப்புடையது என்னலாம். அமைதியோடு அப் பெண்ணின் செயலைப் பார்த்துக்கொண்டே யிருந்த மனிதனிடம், "இவையெல்லாவற்றையும் எடுத்துக் கொள். என்னையும் என் கணவரையும் உயிரோடு விட்டுவிடு," என நடுங்கிய குரலில் கை கூப்பி வணங்கிக் கேட்டாள். அதனைக் கேட்ட அம் மனிதன், 'உற்ற காலத்தில் உதவாமல் உன்னை விட்டுச் சென்ற கணவன் உயிரை ஏன் வேண்டுகின்றாய்?' எனத் திரும்ப உரைத்தான். 'தமிழ்ப் பெண்களுக்குக் கணவனே தெய்வம்! அவனையில்லாத வாழ்வு வாழ்வாகுமா?' என்று இரக்கக் குரலில் கூறி வேண்டினாள். 'இருவருயிர்க்கும் பாது காவலளிப்பேன். இது சத்தியம். ஆனால், எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும். இதோ! இங்கே குவித்திருக்கும் நகைகளை யெல்லாம் நீயே எடுத்துக்கொள். உனது கழுத்திலிருக்கும் தாலியை மட்டும் கொடுத்து விடு. அதனைக் கொடுப்பதாயின் உங்கள் இருவரையும் உயிரோடு விட்டு விடுவேன்' என்றான். அந்தப் பெண்மணி, 'எங்கள் உயிர் போவதானாலும் இந்த ஒன்றைமட்டும் தரமாட்டேன். எனது தெய்வக்கற்பின் அடையாளம் அது' என்று சிறிது உரத்த குரலில் சொன்னாள். அவ்வுரை கேட்ட மனிதன் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவில்லை. அப்பொழுது ஓடிப்போன கணவனைப் பிடித்துக் கொண்டு வந்து அந்த மனிதனின் துணைவர்கள் நிறுத்தினார்கள். "மனைவிக்குத் துரோகம் செய்யும் நீ ஒரு கணவனா? உன்னை ஆண்

மகன் என்று சொல்லிக்கொள்ள வெட்கமில்லையா ? மானங் கெட்ட உனக்கு மனைவி வேறு ?'' எனக் கடுஞ் சொற்கள் கூறி வசை மொழிந்தான். அவனும் உள்ளம் நாணி உரைக்க நாவெழாமல் மண்டியிட்டு வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டான். இரு வரையும் எவ்வித இன்னலும் செய்யாமல் அனுப்பி வைத்தான்.

அந்தப் பண்புடைய மனிதன் யார் என அறிய வேட்கை எழுமன்றோ? அம் மனிதனே திருநெல்வேலி மாவட்டம் முழுவதையும் தன் பெயர் கேட்ட அளவில் நடுங்க வைத்த இரும்பு மனிதன் **செம்புலிங்கம்.** இளமையில் உரம்படைத்த உள்ளமும் உடல்வலிமை யும் உடையவனுயிருந்தவன். நேர்மை தவருத வணி கனுக விளங்கியவன். இல்லற வாழ்விலே அன்பும் அறமும் கொண்டு இன்பவாழ்வு நடத்தியவன். மக்க ளிடத்திலே மிக்க அன்பும் ஆர்வமும் கொண்டொழுகி யவன்; ஊரார் அனைவரும் நேர்மைக்கு உறைவிடம் எனப் போற்றிய புகழாளன். செல்வச் செருக்கும் அதிகார ஆணவமும் உடைய ஒருவனின் பொருமை யால் களவு வழக்கு ஒன்றில் உட்படுத்தப்பட்டான். அதிகாரிகள் சிறைப்படுத்தும் பொருட்டு வருவதை முன்னரே அறிந்தான் ; மறைவிடம் சென்று அஞ்சி அஞ்சி வாழ்ந்தான் ; இலங்கை, பினங்கு, மலேயா முதலிய இடங்களுக்குப்போய் வணிகம் புரிந்து குடும் பத்திற்குப் பொருளுதவியும் செய்து வந்தான் ; மனைவி மக்களை அரசியல் அதிகாரிகள் அடித்துத் துன்புறுத் திய செய்தி அறிந்து தன் ஊர் மீண்டான். இனி, அர சியல் அதிகாரிகளின் தொல்லை கிடையாது என்று எண்ணினன். ஆனல், அதிகாரிகள் மீண்டும் அவனைச் சிறைப்படுத்த முயலவே, மலையிடத்தைத் தன் வாழிட மாக அமைத்துக்கொண்டான். மூன்று முறை கைது செய்யப்பட்டுத் தப்பினன். 'பகற்கொள்ளைக்காரன்'

என்றும், 'கள்வர் தலைவன்' என்றும் எங்கும் பறை சாற்றப்பட்டான். நேர்மையான வாழ்வு வாழ்ந்தவனுக்கு நீதி கிடைக்காததைக் கண்டான்; உலகம் பணத்திற்குக் கட்டுப்பட்டிருப்பதைக் கண்டான்; பணத்திற்கு முன் நீதியும் தலைகுனிந்து நிற்பதையும் அறிந்தான்; பணமிருப்பவன் ஒன்றுமறியாத ஏழை மீது குற்றம் சுமத்துவதை உலகம் அனுமதிக்கிறதே என வருந்தினான். ஏழைகள் செல்வர்களின் கொடுமைக்கு அடிபணிந்து வாழ்வதெற்கெல்லாம் பணமே காரணம். பணத்தை வைத்துச் சத்தியம் விலை பேசி விற்பனை யாவதை நேரிலே கண்டான். இனி, உண்மைக்குக் காலமில்லை. பணமுள்ளவர்பால் சென்று பொருளைக் கவர்ந்து ஏழைகளை வாழ வைப்பதே உண்மை வழி—அறிநெறி என்று எண்ணித் துணிந்தான். மானத்தோடு வாழ நினைப்பவர்க்குக் காலம் வர வேண்டும் என்று நினைந்து கொள்ளைப் பொருளையெல்லாம் ஏழைகளுக்கு உதவிவந்தான். நாட்டு மக்கள் அவனை உலகங்காணாத வீரன் என்றும், தெய்வப் பிறவி என்றும் போற்றிப் பாதுகாப்பளித்தும் வந்தனர். சந்தை கூடுமிடங்கள், புகைவண்டி நிலையங்கள், பொது மன்றங்கள் முதலிய எல்லா இடங்களிலும் கும்மி, சிந்து முதலிய பாடல்கள் ஒலித்தன. அவன் புகழ் பாடப்பட்டன. தன் மக்களைக் காத்துக் கல்வியூட்டிய ஏமி கார்மிக்கேல் என்ற அருள்மாது கூறிய ஏசுநாதரின் வழியைப் பின்பற்றித் திருந்தி நல்லோர் புகழும் வள்ளியோனாக வாழ்ந்தான். எனினும், ஆட்சியாளர் தம் வஞ்சினத்தைத் தீர்த்துக்கொண்டனர்! இந்த வாழ்க்கையை மேற்கொண்ட செம்புலிங்கம் தமிழ் நாட்டுப் பெண்மணியின்பால் கண்ட மானப் பண்பிற்குப் பெருமதிப்பு வழங்கியதன் காரணம், தமிழ் நாட்டின் வித்தாக அப் பண்பு அழியாது வந்ததனாலன்றோ? தம் நிலையிற் சிறிது தாழ்ந்தாலும் உயிர் வாழாதவர்கள் தமிழர்கள். தம் நிலையில் தாழ்ந்தால்

இழிந்த மயிரை யொப்பர். தலையில் இருப்பது வரை யிலும் எண்ணெய் பூசி அழகு செய்து காக்கப்படும் மயிர், தலையினின்றும் உதிர்ந்த விடத்து எவ்வளவு இழிவாகக் கருதப்படுகின்றது ? அந்த இழிந்த நிலையை மானமுடையோர் விரும்புவரோ ? அங்ஙனம் விரும்பின் அவர்கட்கு இவ்வுலகில் இருப்பதற்குத் தகுதியுண்டோ ? இருபதாம் நூற்றாண்டிலே வாழ்ந்த பாரதியார்,

> ''மானம் சிறிதென் றெண்ணி
> வாழ்வு பெரிதென் றெண்ணும்
> ஈனர்க் குலகந் தன்னில்,—கிளியே !
> இருக்க நியதி யுண்டோ ?''

என இடித்துரைக்கும் கடுமொழிகளைச் சிந்தியுங்கள் ! அதே நூற்றாண்டிலே வாழ்ந்த செம்புலிங்கம் பிறர் மானங்காத்த செயலும், அவனால் சந்திக்க நேர்ந்த இளம்பெண் மானம் காத்த அருமையும் அறிந்தோம். அவன் செல்வர் வீட்டுப் பெண்களின் நகைகளைக் கேட்டு வாங்கும் போதும் அவர்களின் மானத்தின் அடையாளமாக விளங்கும் தாலியை ஒரு நாளும் வாங்கியதே இல்லை. தாலியை இழப்பதை மானத்தை இழப்பதாகக் கருதிய கற்பு வாழ்வு தமிழகத்தில் கடைசிவரை நிலவியிருந்தமைக்கு இதனைக் காட்டிலும் சான்று வேறு காண முடியுமோ ?

முடிவுரை

இதுகாறும் ஆராய்ந்தவற்றால், இலக்கியங்களின் வித்தாக விளங்குவது மானம் என்ற பண்பு என்பதும், இரண்டாயிரமாண்டுகட்கு முற்பட்ட இலக்கியங்கள் முதல் இருபதாம் நூற்றாண்டு இலக்கியங்கள் வரை யிலும் அப் பண்பு அழியா வித்தாக அமைக்கப்பட்டு

வந்தது என்பதும், சேர வேந்தர்கள், பாண்டி மன்னர்கள், சோழ அரசர்கள் தம் மான வுணர்வினின்றும் வழுவாது வந்தனர் என்பதும், தமிழ் நாட்டுப் பெண்டிரும் மறத்தின் அடிப்படையிலும் கற்பின் அடிப்படையிலும் மானங்குன்றாது வாழ்ந்தனர் என்பதும், இலக்கிய வழக்கிலன்றி உலக வழக்கிலும் மானப் பண்பு வித்தாக இலங்கியது என்பதும், பண்புகட்கெல்லாம் தலைமையும் இன்றியமையாமையுமுடையதென்பதும் விளங்கக் காட்டப்பட்டன.



# ஓவியர் பெருமகன்

## பத்துப்பாட்டின் பெருமை

தமிழகத்தில் வழங்கும் செந்தமிழ்ப் பனுவல் களிலே சிந்தைக்கும், செவிக்கும் இன்பம் பயக்கும் சீரிய கருத்துக்களை யுடையது பத்துப்பாட்டு எனும் சங்க இலக்கியமாகும். இந் நூல் அகவ லோசையின் ஒழுகிச் சிறப்புற்று ஒளிர்வது; தமிழ்ச் சான்றோர் வகுத்த அகம், புறம் என்னும் பொருட் பாகுபாடும், குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் திணைப் பாகுபாடும், இயல், இசை, நாடகம் என்னும் கலைப் பாகுபாடும் ஒருங்கே செறிந்து விளங்குவது ; வேற்றுமொழிச் சொல்லும் பொருளும் பெரிதும் விரவாது செம்மாந்து செல்லும் தூய செந்தமிழ் நடையான் இயங்குவது; பழகுந் தொறும் பழகுந் தொறும் பண்புடையாளர் தொடர்பு போன்று பயில்

தொறும் பயில்தொறும் பல்விதச் சுவையினைக் கருத்திற்குப் பெருவிருந்தாக நல்குவது; சாந்துணையும் கற்க விழையும் அவாவினை உள்ளத்தே எழச் செய்வதாய சிந்தனைக் களஞ்சியமாக அமைந்தது ; உச்சிமேற் புலவர்கொள் நச்சினார்க்கினியர் என்ற பேராசிரியரால் உரை வகுக்கப் பெற்றது ; 'ஆன்றோர் புகழ்ந்த அறிவினில் தெரிந்து சான்றோருரைத்த தண் தமிழ்த் தெரியல் ஒருபது பாட்டும்' என அறிஞரால் போற்றிப் புகழ்வது; தமிழர் கொண்டொழுகிய பண்பாடுகளிலே தலைசிறந்ததும், மக்களினத்திற்கே மாண்பினைத் தருவதுமாகிய அருட்டன்மையினை ஒவ்வொரு பாட்டின்கண்ணும் வலியுறுத்துவது; பொன்றுங்கால் பொன்றாத் துணையாவது அறமே என்பதை வரையாது வழங்கிய வள்ளல்கள் வரலாற்றால் உள்ளமும் உயிரும் உணர்ச்சி பொங்கக் கூறுவது. சுருங்கக் கூறின், மக்கள் மக்களாக இன்புற்று வாழ்ந்தமையை ஓவியமாக வரைந்து காட்டித் தூய வாழ்வு நடாத்தத் தூண்டி நிற்பது பாரோர் புகழும் பத்துப்பாட்டேயாம்.

## சிறுபாணாற்றுப்படையின் சிறப்பு

இத்தகைய அருமையும் பெருமையும் வாய்ந்த பத்துப்பாட்டின் மூன்றாவதாக விளங்கும் பாட்டே சிறுபாண் ஆற்றுப்படை என்பதாம். இப் பாட்டு ஏனைய பாட்டுக்களினும் மிகவும் சிறந்தது என்பதைத் தக்கயாகப் பரணியின் உரையாசிரியர் வாயிலாக அறியலாம். சோழ மன்னரிற் சிறந்தார் மூவரது அவைக்களத்தும் வீற்றிருந்து கவி மழை பொழிந்த ஒட்டக்கூத்தரால் இயற்றப்பட்டது தக்கயாகப் பரணி. அந் நூலின்கண்ணுள்ள கடை திறப்பின் முதற் பாடற்கு உரை வரையுமிடத்து, ''இப் பாட்டு குறிப்பால் பொருளுணர்த்தும் அருமையும் பெருமையும் உணர்க; 'காவெரி யூட்டிய கவர்கணைத் தூணிப் பூவிரி கச்சைப் புகழோன்

றன்முன்' என்பது பீமசேனற்குப் பெயராயிற்று என உணர்க. இது சிறப்புடைத்தான சிறுபாணுற்றுப் படை'' எனக் குறித்துள்ளமையே சான்றாகும். இப் பெற்றி வாய்ந்த சிறுபாண் ஆற்றுப்படையின் தலைவனே இவண் ஆராயப் புகும் ஓவியர் பெருமக னுவான். அவனே கொடைவள்ளல்கள் எழுவரும் ஈட்டிய ஒண்புகழினைத் தன்னதாக்கித் தமிழகத்தை வாழ்வித்த தண்ணளியோன்; நல்லிசைப் புலவராம் நத்தத்தர் பாடிய நல்லியக்கோடன். அவ் வள்ளியோன் வரலாற்றுச் சிறப்பினைப் பாட்டின் வழிச் சென்று கண்டு மகிழ்வது பொருத்தமாகுமன்றே ?

## பாட்டின் அமைப்பு

இப் பாட்டின்கண் யாழ் வல்ல பாணரிருவர் வழி யின்கண் எதிர்ப்படுதலாக வைத்து, அவ் விருவரையும் ஒரே தன்மையில் வைத்துக்காட்டாது வறுமையின் முடிந்த எல்லையினை ஒரு புறமும் செல்வத்தின் எக் களிப்பை ஒரு புறமும் உருவெழுதிக் காட்டுவார்போல, வள்ளியோரின்மையான் வாட்டமுற்ற பாணனையும், வரையாது வழங்கிய பெரும் பொருள் மகிழ்ந்து செம்மையுற்ற பாணனையும் எதிர் நிறுத்துகின்றார். புலவர்கள் வறுமைக் காலத்தும் செம்மை குன்றாதவர் எனும் உயர்ந்த பண்பை நிலைநாட்டுவார் போலவும், இந்திரர் அமிழ்தம் இயைவதாயினும் தமியராய் உண்ணாது பகுத்துண்டுமகிழும் பான்மையுடைய தமிழ்க் குடியின் சிறப்பைத் தெளிவுறுத்துவார் போலவும், பெரும் பரிசில் பெற்ற பாணன் காண்டலும் இரங்கித் தான் பெற்ற இன்பம் பெறுதல் வேண்டுமென இன வுணர்ச்சி கொண்டு, தன் எதிர் வந்த பாணனை விளித்துக் கூறும் தன்மையில் அமைக்கின்றார்.

## கடையெழு வள்ளல்களின் சிறப்பு

தமிழ் நாடு சிறக்கக் காரணமாயிருந்தோருள் கடையெழு வள்ளல்கள் தலைசிறந்தோராவர். அவர்கள் எழுவர் வரலாறும் ஒன்றுபடக் காணக் கிடப்பது புறநானூற்றிலும், இவண் ஆராயும் சிறு பாணாற்றிலும் ஆம். வள்ளியோர் எழுவர் உள்ளி வந்தோர்க்கு இலன் எனும் எவ்வம் உரையாது உளங் குளிரக் கொடையளித்தமை கூறப்பட்டுள்ளது. இவ் வடுவிலா வையத்து மன்னிய மூன்றில், நடுவணை தெய்த இருதலையும் எய்துமென்பதும் செல்வத்துப் பயன் ஈந்து இசைபட வாழ்தல் என்பதும், உளங் கொண்டு, தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராய்-அன்பும் அருளும் உடையராய்-வாழ்ந்தனர் என்பது அறிஞர் உணர்ந்ததேயாம். இவர்கள் கொடைப் பண்பை நமக்குக் காட்டியவர், புலவர்மணிகளாகிய நத்தத்தனாரும், பெருஞ்சித்திரனாரும் எனினும், இவர்கள் பாடுதற்குத் துணையாய் நின்றிலங்கிய இரு பெரும் வள்ளல்களாகிய நல்லியக்கோடனையும், குமணனையும், தமிழ் நாடு என்றும் மறவாது நன்றி செலுத்தும் கடப்பாடுடையதாகும்! "சோற்றுச் செருக் கல்லவோ தமிழ் மூன்றும் சொல்வித்ததே" என்று பிற் காலப் புலவன் பெருமிதத்தோடு பாடியதுபோல, வாரி வழங்கும் வள்ளல்களின்றேல் வண்டமிழ்வாணரெங்கே? வளப்பமிகும் பாடல் எங்கே? வாழ்வில் தமிழர் செழிப்ப தெங்கே?

இந் நூலினகத்தே குறிக்கப்பட்ட பேகன், பாரி, காரி, ஆய், அதிகமான், நள்ளி, ஓரி எனும் பெயருடைய எழுவரும் காலத்தால் ஒத்தவரென்று கொள்ளினும் எவர் முதல்வர் எனத் துணிதல் இயலாது. அது போன்றே வள்ளல் தன்மையிலும் இன்னவர்தான்

சிறந்தாரெனக் கூற வியலாவாறு புகழ்கொண்டு திகழ் கின்றனர். ஆனால், யாம் எழுவரையும் ஒன்றாகவே மதித்தல் வேண்டும் என்னும் கருத்தை உட் கொண்டோ, வேறெக் காரணம் பற்றியோ, ஒவ்வொரு வள்ளலையும் நன்னான்கு அடியில் வரைப்படுத்திச் சிறப்பித்து யாத்த திறம் பாராட்டற்குரியதாம். ஒவ் வொரு நான்கு அடிகளிலும், முன் இரண்டில் வள்ளல் தம் கொடைச் சிறப்பும், பின்னிரண்டில் அவர் தம் நாட்டுவளம், வென்றிச் சிறப்பு முதலியனவும் குறிக்கப் பட்டிருக்கும் அருமையை என்னென்பது! இதன்கண் குறித்துள்ள முறையிற் பிறழ்ந்து, புறநானூற்றில் பெருஞ்சித்திரனார் எழுவரையும் அமைத்துப் பாடியுள் ளார். யாம் ஈண்டுக் காணும் முறையில் வரைவாம்.

முதற்கண், பேகன் என்ற வள்ளல் புகழப்படு கின்றான். இவ் வள்ளல் மலை நாட்டிடத்தே மகிழ்மீக் கூர்ந்து கூவாநின்ற மயில் ஒன்றினைக் கண்டு, குளிர் மிகுதியால் துன்புறுகின்றது போலுமென இரக்க முற்று அருள் மிகுதியால், விலை மதிக்க வொண்ணாத கலிங்க மொன்றை நல்கினான் எனக் கூறப்பட்டுளது. அதன் பின்னர்ப் பறம்பு நாட்டை யாண்ட பாரி எனும் வள்ளலின் சிறப்புப் பேசப்படுகின்றது. பாரி எனும் வள்ளல் மலைநாட்டின்கண்ணுள்ள நெடுவழியில் தேர் மீது இவர்ந்து சென்றாக, அதுபோழ்து வழி யிடத்தே முல்லைக்கொடி படர்ந்து காற்றா லசைந்து கொண்டிருக்கவும், அஃது கொழுகொம்பின்றித் தவிப் பதாக எண்ணி, அருள் மிகுதியான் தன் தேரை முல்லைக்குப் பற்றாக நிறுத்தி மீண்டனன் என அறி கின்றோம். இனி, காரி எனும் வள்ளல் தன்னை வந் தடைந்த இரவலர்க்கெல்லாம் இல்லை யென்னாது இன்மொழி கூறி, குதிரையோடே தன் வளப்ப மிகு நாட்டினையும் கேட்டார் வியக்குமாறு அளித்தனன் என்பது தெரிய வருகிறது. ஆய் என்னும் வள்ளல்,

ஆலமர் செல்வராம் சிவபெருமானுக்கு, நாகமொன்று தனக்கு நல்கிய ஒளி மிகுந்த நீல நிறம் பொருந்திய கலிங்க மொன்றை, இறைவன்பால் வைத்த அன்பின் மிகுதியால் மனமுவந்து கொடுத்தான் என்பது உணரக் கிடக்கிறது. அதிகமான் என்ற வள்ளல் கிடைத்தற் கரிய சிறியிலை நெல்லித் தீங்கனி யொன்றைத் தானுண்டு நெடிது வாழ்தலை விரும்பாது, புலமை மிக்குடைய ஒளவையாருக்கு விரும்பி அளித்தனன் என்று காண்கிறோம். நள்ளி என்ற வள்ளல் தன்னிடத்திலுள்ள பொருட்களைக் கரவாது, நட்டோர் உவப்ப, அவர்கள் இல்லறம் இனிதே நடைபெறக் கொடுத்து மகிழ்ந்தனன் என்று சொல்லப்பட் டிருக்கிறது. இறுதியாக ஓரி என்ற வள்ளல் கூறப்படு கின்றான். இவ் வள்ளல் பெருந்தகை தனது வளப்ப மிகுந்த நாடுகளை இசை வல்லோர்க்கு வரையாது வழங்கினன் என்று கூறப்பட்டுள்ளது.

## கொடைப் பண்பும் திறமும்

இவண் பேசப்பட்ட எழுவரது கொடைப் பண் பின் திறனை ஆராயின், ஒருவரை யொருவர் விஞ்சி நின்று எவர் சிறந்தவர் என்று அறிய வியலாவாறு கொடையில் சிறந்து நிற்றல் புலனாகும். இரு பெரு வள்ளல்கள் அஃறிணைப் பொருள்களைக் கண்டு உளம் இரங்கிச் செய்தது அருட் கொடையாகும். ஒரு வள்ளல் வறுமையால் வருந்தி வந்த இரவலர்க்கெல் லாம் வரையாது வழங்கியது பெருங் கொடையாகும். ஒரு வள்ளல் இறைவனுக்கு அளித்தமை பற்றற்ற கொடையாகும். அதிகமான் ஒளவையாருக்கு அளித்த கொடை உயிர்க் கொடையாகும். ஓரி இசைவாணர் முதலியோருக்கு அளித்தமை கலைக் கொடையாகும். இவை யாவும் ஓருண்மையை உணர்த்துதலை உற்று நோக்குழிப் புலப்படும். தமிழ் நாட்டில் எத்தனையோ

வள்ளல்களிருக்கவும், இவ்வெழுவரை மட்டும் எடுத்துச் சிறப்பித்ததன் கருத்து என்னையோ வெனின், இறைவனைப் போற்றலும், இரவலரை ஓம்பலும், புலவரைப் பேணலும், இசைச் செல்வரை ஏத்தலும், அஃறிணைப் பொருள்கட்கு அருள்புரிதலும், கலைகளை இன்றியமையாது காத்துவருதலும் தமிழர் கடமை என்பதை வலியுறுத்தற்கேயாம். அன்றியும், இறைவனால் படைக்கப்பட்ட பொருள்களுள் எவை யேனும் ஒன்றற்குத் துன்பம் வந்துறின் அதன்மாட்டு இரக்கம் காட்டி இயன்றவாற்றான் அருளும் நீர்மை யர் தமிழ்ப் பெருமக்கள் என்ற சிறந்த உண்மையைத் தெளிவாக்குகிறது. இன்று நம்மிடையே உலவு கின்ற பதிற்றுப்பத்துள் சேரவேந்தர் அனைவரும் பெருங்கொடை வள்ளல்களாக விளங்கினர் என்ப தும், தமிழர் உயர்பண்பை வலியுறுத்துவதாகும். இவர்களுள், பாரியும் பேகனும்,

> *" முல்லைக்குத் தேரும் மயிலுக்குப் போர்வையும்*
> *எல்லைநீர் ஞாலத் திசை விளங்கத்*
> *தொல்லை யிரவாம லீந்த விறைவர் "*

எனப் புறப்பொருள் வெண்பாமாலை யுடையார் பாராட்டுதற்குக் காரணம், அவர்கள் அஃறிணைப் பொருள்கள்பால் காட்டிய அளவிலாக் கருணையே என்பதற்கு ஐயமுண்டோ !

இவர்கள் செயல் உண்மையாமோ என்ற ஐயம் எழுவது இயற்கையே. அன்பு கனிந்து அருள் முற்றிய பெருமக்கள் எவரும் இத்தகைய வியத்தகு செயலைத் தம்மையும் மறந்து செய்தலுண் டென் பதற்கு ஒரு சான்று அகநானூற்றினின்றும் சுட்டுதல் பொருத்த முடையதாகும்.

தலைவன் பிரிந்து பன்னாட்களாயின. தலைவி அவன் வரும் வழிமேல் விழி வைத்துக்கொண்டு நிற்கிறாள். நாடோறும் நினைந்து நினைந்து உருகிய உள்ளமும், பார்த்துப் பார்த்துப் பூத்த கண்ணும் உடையளாய் வருந்தி யிருந்தாள். இந் நிலையை அறிந்த தோழி, "தலைமகன் வருங் காலமாகிய கார்ப் பருவம் தொடங்கியது. அவன் உன்னை மறந்து வாழ்தலும் கூடுங்கொல்!" என்று பருவங்கூறி வற்புறுத்தி அவன் அருளுடைமையைப் புலப்படுத்து கின்றாள். அஃதாவது,

*"குரங்குளைப் பொலிந்த கொய்சுவல் புரவி*
*நரம்பார்த் தன்ன வாங்குவள் பரியப்*
*பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த*
*தாதுண் பறவை பேதுறல் அஞ்சி*
*மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்"*

என்பதாம். தலைவன், தலைவி வருந்துவள் என்னும் கருத்துடையனாய்ப் புரவியினை விரைந்தோட்டித் தேரினைச் செலுத்தி வரும் வழியில், பொழிலகத்தே தேனுகர்ந்து மலரின்கண்ணே பெடையோடு வதிந்த வண்டு மணியோசை கேட்டு மயங்குமெனும் அருளுடையனாய், மணிகளின் நாவை அசையாமல் இழுத்துக்கட்டி வரும் இயல்பினன். இத்தகைய அஃறிணைப் பொருள்களிடத்தும் அருளுடையவன் நின்பால் அருளுதற்கு மறப்பனோ? மறவான் ஆகலின், சிறிதும் கவல்தல் வேண்டாம் என ஆற்றுகின்றாள். இதனால் அறியக் கிடப்ப தென்னை யெனின், தமிழ்நாட்டு மக்கள் அருளுளம் படைத்து விளங்கினர் என்பதேயாம். இந் நாளில் இந் நிகழ்ச்சி எங்கேனும் நிகழுமேல் எள்ளி நகையாடுவரென்பது திண்ணம்!

## பாட்டுடைத் தலைவன் வரலாறு

கடையெழு வள்ளல்கட்குப் பின் பெருங்கொடையாளிகளாக விளங்கியவர்களுள் தலைசிறந்து நின்றவன் இப் பாட்டின் தலைவனுகிய நல்லியக் கோடன் என்பான். இவன் நாடு ஓய்மா நாடென்பது பெயர்க்கு முன்னின்று சிறப்பிக்குமாற்ருல் அறியலாம். இவன் மிக்க வலிமை பொருந்திய ஓவியர் குடியிற்பிறந்தவன் என்பது, 'உறுபுலி துப்பின் ஓவியர் பெருமகன்' என்ற அடியால் விளக்கமுறுகிறது. இவன்முன்ஞேர்களில் ஓய்மான் நல்லியாதன், ஓய்மான் வில்லியாதன் என்ற இருவர் வள்ளல்களாயிருந்தனர் என்பது புறநானூற்ருல் தெரியவருகிறது. இவனும் புறத்திணை நன்ஞகனர் என்ற புலவரால் புறநானூற்றில் புகழப்பட்டுள்ளான். "ஓரை யாயத் தொண்டொடி மகளிர்" எனத் தொடங்கும் பாட்டில், "பெருமா விலங்கைத் தலைவன் சீறியாழ் இல்லோர் சொன்மலை நல்லியக்கோடன்" என்ற அடிகட்கு விரிந்த பாடல் வழங்கியமை போலச் சிறுபாணுற்றுப்படையில் நத்தத்தனர் குறித்துள்ளார். இவ்வள்ளல்தன் ஊர்களாகிய மாவிலங்கை, எயிற்பட்டினம், வேலூர், ஆமூர் என்பவற்றுள் மாவிலங்கை ஒன்றையே இருவரும் சிறப்பித்துள்ளமையின் அது இவனது தலைநகரமாயிருத்தல்வேண்டும் எனக் கருத இடமுள்ளது. இவற்றுள், மாவிலங்கை என்பது தமிழகத்தின் பன்னிரு நாடுகளில் அருவா நாடென்று கூறுவாருமுளர். ஏனைய மூன்றும் தொண்டை நாட்டின் இருபத்து நான்கு கோட்டங்களுள் மூன்று கோட்டங்களுக்குத் தலைநகராயுள்ளவை ஆகும். இந் நான்கின் சிறப்பினையும் பாணர் வாயிலாகப் பிறிதோர் பாணனுக்கு அறிவிக்குமாற்ருன் அமைந்துள்ளமை மிக விரிந்துகாணக் கிடக்கிறது. இவ்வாற்றுப்படைக்கண், "வஞ்சியும் வறிதே, மதுரையும் வறிதே, உறந்தையும் வறிதே,"

என்றும், "எழுவர் பூண்ட ஈகைச் செந்நுகம், விரிகடல் வேலி வியலகம் விளங்க, ஒருதான் தாங்கிய உரனுடை நோன்றாள்" என்றும் கூறப்பட்டுள்ளமையின் முடியுடை மூவேந்தருக்கும் கடையெழு வள்ளல்கட்கும் பின்னாளில் பெரும் புகழ்பெற்று விளங்கியவன் என்பது தெரிகிறது.

## நல்லியக்கோடனின் அரிய பண்புகள்

இவ் வள்ளலின் நாட்டுவளம், நகரச் சிறப்பு, உள்ளத்துரன், ஈகையின் ஏற்றம் முதலிய அருமைகளைப் பாணன் கூறுமுகத்தாற் கூறிக் காண்போம்.

"முதுவாயிரவல! புலமைக்கு நண்பன் வறுமை. வறுமையின் துணை என்றும் நம்பால் உளதாயிருக்கும். வறுமையின்றேல் ஈகை சிறக்குங்கொல்? நின்பால் எய்தி நிற்கும் வறுமை எம்பாலும் மிக்கு விளங்கி வருத்தியது. எம் இல்லின்கண் குடிகொண்டிருந்தது. எம் இல்லின் அட்டிலிலே உணவு சமைத்துப் பன்னாட்களாயின. அவ்வடுக்களையின் காட்சியை இவண் கூறுவன் கேள்:

"விழியாத கண்ணையும் வளைந்த செவியினையும் உடைய நாய்க்குட்டி மார்பைச் சுவைத்து உண்ணுதலின் வருத்தமும், தன் பசித்துன்பத்தால் உண்டாகும் வருத்தமும் பொறுத்தலாற்றாது குரைக்கும் புனிற்று நாய் உறைகின்ற அட்டில். ஒரு புறம் கூரையிடத்துள்ள கழிகள் ஆக்கையற்று விழுகின்ற அட்டில். சுவரெல்லாம் திரண்ட கறையான்கள் அரித்த அட்டில். அதோடு புழுதியிடத்தே காளான்கள் பூத்து விளங்கும் அட்டில். இவ் வட்டில் நெடுநாட்கள் இந் நிலையில் இருந்தமையின், யாங்களிருவரும் பசியால் வாடினோம்.

உடல் இளைத்த என் இல்லாள் கடும்பசிக் காற்ருது குப்பை வேளையை உகிராற் கிள்ளி வந்தாள். சுவை பயத்தற்கு இடும் உப்பும் இல்லாத வறுமையள். என் செய்வாள்! உப்பின்றி அட்டிலிலே பக்குவம் செய்து, வறுமையுறுதல் இயற்கை என்பது அறியாது புறங்கூறுவோர் காண்டற்கு நாணித் தலைவாயிற் கதவடைத்து, இரும்பே ரொக்கலொடு பகிர்ந்துண்டனம். இம் முறையில் உயிர் வாழ்தல் இயலுமோ? இயலாதன்றே. இத்தகு வறுமை எம்மை விட்டு அகலவும், அறிவு முதலியன அழிதற்குக் காரணமாகிய பசியால் உளதாகிய வருத்தம் அறவே ஒழியவும் அறுசுவை யுண்டியும் இருபெருஞ் செல்வ மும் களிறும் தேரும் அளவின்றிப் பெற்று வந்தனம். மக்களுக்கு இன்றியமையாதனவாகச் சொல்லப்பட்ட மானம், குலம், கல்வி, வண்மை, அறிவுடைமை, இன் பம் ஆகிய பத்தினையும் சிதைத்துத் திருச்செற்றுத் தீயுழி உய்க்கும் பசியெனும் பாவியை எங்களை விட்டு நீங்கச் செய்த வள்ளல் பெருமகன் ஒருவன் உளன். அவன் ஒருவனே இந்நாளில் பசிப்பிணி மருத்துவனாக விளங்கிப் புகழ் கொண்டுளான். உங்கள்பால் உறைந்து நலியும் உறுபசியும் அவன்பால் செல்லின் ஒழியும். ஆதலின், அப் பெருந்தகையின் இயல்பு கூறுவன். செவி மடுப்பீராக.

"வானிடத்துள்ள உருமேறு தான் ஏறுதற்காக இடித்து வழியாக்கிச் சென்ற உயர்ந்த சிகரத்தினை யுடைய மலைகள் செறிந்த குறிஞ்சி நாட்டுக்குரியோன். எந்நாளும் இடையருது நடைபெறும் விழாவினையும், களிற்றுமத அருவி எழுந்த துகளை அவிக்கையினலே புழுதி யடங்கின அழகுமிக்க தெருக்களையும் உடைய பழமையான ஊரையுடையவன்; பொருநர்க்கும், புல வர்க்கும், எவ்வுயிர்க்கும் செந்தண்மைபூண்டொழுகும் அந்தணர்க்கும் வரையா தளித்தற் பொருட்டுக் கட

வுண் மால்வரையாகிய இமயம் ஒரு கண்ணை விழித்துப் பார்த்த லொத்த அடையா நெடுங்கதவத்தையுடைய வாயிலமைந்த அரண்மனையுடையவன். இவன், 'செய்ந்நன்றி கொன்றோர்க் குய்தியில்' என்பதை உணர்ந்து நன்றி மறவாது வாழும் மாண்பினன். "கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோல் அதுவல்லது, இல்லை நிலக்குப் பொறை" எனும் உண்மை தெளிந்து, சிற்றினத்தைத் தனக்கு உறவாகக் கொள் ளாதவன். முகத்தின் இனிய நகாஅ அகத்தின்னு வஞ்சரைப் போலன்றி, எவரிடத்தும் இன்முகமுடை மையும் இனியமொழி பகர்தலும் உடையவன். அழியு நர் புறக் கொடை அயில் வேலோச்சாது அருளுதலைச் செய்யும் ஆண்மையாளன். இவன் ஆண்டகைமை யுணர்ந்து அஞ்சிவந்து அடிபணிந்து ஈயென இரக்குவ ராயின், சீருடைமுரசு கெழுதாயத்து அரசேயல்லாமல் இன்னுயிரும் கொடுக்க ஒருப்படும் உரவோன். அங்ங னன்றி, அவன் ஆற்றல் போற்றாது உள்ளம் எள்ளி யோர் துஞ்சிபுலி யிடறிய சிதடன்போல உய்ந்து பெயர்தல் அரிதாகும். மாற்றார்முன் தன்படை அழிந்து ஒன்னாரைத் தெறும் பேராண்மையாளன். கூற்றமே குறுக்கிடினும் எண்ணிய எண்ணியாங்குச் செயலாற் றும் திண்ணியன். தன்னைக் கண்டார் உள்ளம் பிணிக் கும் தோற்றப் பொலிவுடையன். கேட்டார் செவி குளி ரும் வீரப் புகழ் உடையன். ஆடவரும் அவாவும் அகன்ற மார்பும், பணைத்த தோள்களுமுடையன். இத் தகு அழகின் வயப்பட்டு நுகர விரும்பும் மகளிர்க்கு இன்பத்தை அளிக்கும் எளியோன். எனினும், அவர்தம் இன்பத்தின் வழியே சென்று அழிக்கும் பொறிவழிச் செல்லாது, ஐம்பொறிகளையும் வென்றடக்கும் விற லோன். 'ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார் முன், வான்சுதை வண்ணங் கொளல்' என்ற பேருண் மையை நன்குணர்ந்து, அறிவுடையார்மாட்டு அறி வுடைமை காட்டியும், அறியாதார்மாட்டுத் தானும்

அறியாமைப் பட்டிருந்தும் ஒழுகும் உலக அறிவு வாய்க்கப்பெற்றவன. தொன்றுதொட்டு அழியாது வருகின்ற சிறப்பினையும் உடைய தொல் இலங்கை யின் பெயர் தாங்கிய மாவிலங்கையைத் தலைநகராக உடையவன். புகழ் வாய்ந்த அரசர் பலர் தோன்றிய ஓவியர்வழி வந்தவன்.

*''நல்லாண்மை என்ப தொருவற்குத் தான்பிறந்த*
*இல்லாண்மை யாக்கிக் கொளல்''*

என்ற குறண்மொழிக் கிலக்காய்த் தன் குடியிற் பிறந் தார் புகழெல்லாம் தனதாகக் கொண்டு குடிவிளங்க நின்ற தகைமையோன். தமிழர் குடிசிறக்க வந்த முடி யுடை மூவேந்தரும், கடையெழு வள்ளல்களும் பெற்ற புகழை உலகமெல்லாம் விளங்கும்படி தானே பொறுத்த மேம்பாடு உடையவன். உண்டாயிற் பதங் கொடுத்து இல்லாயின் உடனுண்ணும் இல்லோர் ஒக்கல் தலைவன். இவ்வகைச் சிறப்பெல்லாம் கொண்டு எங்கள் மிடியினைப் போக்கிக் களிற்று நிரைகளோடு தேரினையும் உவந்தளித்த வள்ளலே, நல்லியக் கோடன் எனும் பெயருடையான். அன்னான்பால் நீவிர் செல்லுதற்குரிய வழியினை அறிவிப்பேன். மகிழ்வுடன் ஏகுவீராக.

### எயிற்பட்டினச் சிறப்பு

''முதலிலே நெய்தல் வளமிகுந்த அவனுடைய பட்டினம் காண்பீர்! ஆங்கே திரை எற்றிப் பொரு கின்ற நீலவானை யொத்த கடல். அதன் கரையிடத்தே நிலவுக் குவித்தன்ன வெண்மணல் பரப்பு. அன் னத்தை யொப்பத் தாழை பூத்து விளங்காநிற்கும். பொன்னென்று கண்டார் மருளச் செருந்தி செறிந்து தோன்றும். நீல மணியோ வெனக் கழிமுள்ளி ஒளி

யுடன் நிறைந்து காணும். நித்தில மொத்த அரும்பு களையுடைய புன்னை மரங்கள் செழித்தோங்கிக் காட்சி தரும்.அதன் பின்னர் அழகிய வைப்பினையும், எயிலாற் சூழப்பட்ட குளிர்மிகு பொய்கையினையும் உடைத்தாய எயிற்பட்டினம் அணுகுவீர். அப்பெருந்தக்கானை நின் மகளிரோடு பாடிச் செல்வீராயின், மனைதோறும் மகிழ்ந்து கொடுக்கும் சுவை மிகுந்த மீன்சூட்டினைப் பெறுவீர்கள்.

## வேலூரின் சிறப்பு

"அடுத்துச் சென்றீராயின், முல்லையும் குறிஞ்சியும் முறைமையிற் றிரிந்த பாலைத் தன்மையுடைய அவனது வேலூரினை அடைவீர்! ஆங்கே அவரை யானது பவளம்போலப் பூத்து விளங்கும். காயாக்கள் மயிலின் கழுத்துப் போன்று அழகுறத் திகழும். முசுண்டை வெண்பஞ்செனப் பூத்து நிற்கும். செங் காந்தள் கைவிரலை யொத்த வடிவினவாய்ப் பரந்து விளங்கும். நெடிய வழிகளெல்லாம் இந்திர கோபம் இயற்கை யழகுடன் பொலிவுறும். இல்லிருந்து நல் லறஞ் செய்யும் தலைவிக்குத் தலைவன் வருங்காலத்தை யுணர்த்துதல் போல, தமிழ் முருகனின் தனிவேல் நுதி போலப் பூத்து விளங்கும் முல்லை பரந்துள்ள வேலூர் உளது. அவண் உறைகின்ற மக்களிடத்து அவ்வரசன் புகழைப் பாடிச் செல்வீராயின், எயினர்தம் மகளிரால் அடப்பட்ட இனிய புளிங்கறிச் சோறும் ஆமானினது சூட்டிறைச்சியும் பெற்று அழிபசிகெட உண்ணுவீர்!

## ஆமூரின் சிறப்பு

"அவண் பெயர்ந்து ஏகுவீராயின், மருத வளம் பழுநிய அவனது ஆமூரைச் சேர்வீர்! மணங்கமழ்

பூக்களால் தொடுத்த மாலையே போன்று நீரிலே பூத்துப் பொலிவுறும் காஞ்சி மரங்கள் உள. அதன் கொம்பரில் தங்கி உறுமீன் வருமளவும் நெடிதிருந்து புலவுக் கயலெடுத்த அழகுமிக்க சிச்சிலிப் பறவை உறைந்து வரும். வெள்ளிய மதியைக் கரும்பாந்தள் சென்று கவ்வுதல் போல, வெண்டாமரை மலர்களி லெல்லாம் வண்டு ஒழுங்கு சென்று கொங்கினை ஆராயும் காட்சி நிறைந்து விளங்கும். விளை கழனியும், குளிர் கிடங்கும், அகன்ற அகமும் மிகுந்துள்ளதோடு ஊடியும் கூடியும் வாழும் இன்ப வொழுக்கம் சான்ற மக்கள் வாழ்வர். அவர்கள்பால் இவ்வள்ளலைப் பாடிச் செல்வீராயின், உழவர் மகளிர் உள்ளிருந்து தம் பிள்ளைகளைக் கொண்டு நும்மனைவரையும் போகாது விலக்கி, அமலை வெண் சோற்றை, ஞெண்டும் பீர்க்கும் கலந்த கலப்புடனே உண்ணத் தருவர்.

## தலைநகர்ச் சிறப்பு

"இத்துணை அன்பும் விருந்தோம்பும் பண்பும் நிறைந்த மக்களைக் கண்டு களைப்புத்தீர்ந்து செல்லுவீ ராயின் அவன் மூதூரைச் சார்வீர்! அது மிகத் தொலை வுடைத்தன்று; மிகவும் அண்மையதே. மயங்காது விரைவிற் சென்றடையலாம். ஆங்கே விழா இடை யறுது நிகழும் விண்முட்ட ஓங்கிய அவன் இருக்கை நகர் உளது. அடையா நெடுங்கதவும், அஞ்சல் என்ற சொல்லும் உடையனாய் ஆங்கே வீற்றிருப்பன் இல் லோர் சொன்மலையாகிய நல்லியக்கோடன். இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழ்க் கலையை எடுத்துக் காட்டி அறிவு விருந்தளிக்கும் புலவர் குழாமும், இரு செவி குளிரவும் இருகண் விருந்தயரவும் இன்னிசை அளிக்கும் பாணரும் கூத்தரும் சூழ்ந்து புகழ, பன்மீன் நடுவண் பான்மதி போலப் பெருமையுடன் அமர்ந் திருப்பன். பரிசில் மாக்கட்கு வரிசை யறிந்து நல்

குதலும், வரிசை யறியாதே ஏனையோர்க்கும் வழங்குதலும் இடையறுது நிகழ்தலைக் காணலாம். இதனுல் பிறரிடத்து நில்லாமல் போகின்ற புகழ் என்றும் நின்று நிலவுகின்ற நல்லியக்கோடன் எனும் வள்ளியோன்பால் மகளிரோடு சென்று, வணங்கி, இலக்கணம் யாவும் நன்கமைந்த நல்யாழை இசைநூல் கூறுகின்ற முறையாலே குரல் குரலாக நிறுத்திப் பண் எழுப்பி, 'அரசே! ஈயேன் என்றல் மிகமிக இழிவு தருந் தகையது என்பதை யுன்னிப் பலகாலும் குவித்த கையினை யுடையை. மக்கட்குக் கட்கினியனுதலினும் செவிக்கினியதனுலே சிறப்புடைத்தெனக் கருதி, இளையர்க்கு, எறிதற் பொருட்டு மனமகிழ்ந்து கொடுத்த வடுவழுந்தின அகன்ற மார்பினையுடையை. உழுவார் உலகத்தார்க்கு ஆணி என்பதும், 'சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம் அதனுல் உழந்தும் உழவே தலை' என்பதும் நன்கு தெரிந்து, குடிபுறந்தரூஉம் செங்கோலினை யுடையை. வையங்காவலர் வழிமொழிந் தொழுகவும், போகம் வேண்டிப் பொதுச் சொற் பொருது, அரசர்க் கெல்லாம் வெம்மை பயக்கும் வேலினையுடையை' என்று நீ சில புகழினைக் கூறுவாயாக. அவை சென்று அவன் செவிப்புகா முன்னரே, இன்மொழி கூறி எதிர்கொண்டழைத்து இருக்கை தந்து மாசில்லாத மெல்லிய உடையினை உடுக்கப் பண்ணி, வழி வருத்தந் தீர அரவு வெகுண்டன்ன அருந்தேறல் நல்குவன். அவ்வளவன்றி, மடைநூல் நெறியில் தப்பாத பல்வேறு அடிசிலை, செங்கதிர் ஒளியையும் இகழும் செம்பொற் கலத்தே கொடுத்து, நும்பால் பிணித்த அன்பினுல் தானே நின்று உண்ணப் பண்ணுவன். அம்மட்டோ! பரிசில் நீட்டிப்பன் எனக் கவலற்க. ஒருநாட் செல்லினும் இரு நாட் செல்லினும் பலநாட் பயின்று பலரொடு செல்லினும் தலைநாட் போன்றே விருப்பமுடையனுய்ப் பரிசில் தரும் பான்மையோன். முத

விலே, மூவேந்தர் மன்னும் அரண்களை யழித்து அவ்விடத்துப் பெற்ற பொருளை, வறுமையான் நலிந்து அவன்பால் நயந்து வந்தோர்க்கும் பாணர்க்கும் குறைவற அளித்து மகிழ்வன். அவர்களைப் போக்கிய பின், படைவீரர்கள் வென்றியால் கொணர்ந்த வளவிய செல்வத்தையும், கைவினை முற்றிய தச்சரால் அழகு பெறச் செய்யப்பட்டுப் பாகரால் ஏறிப் பார்த்து, உண்மை ஓட்டம் உண்டென்று கண்ட தேரினை அதனைச் செலுத்தும் பாகரோடு கொடுப்பதன்றியும், களிறும் பரியும் கணக்கில் பல் அணியும் பரிசிலாகத் தந்து அன்றே விடுப்பன். ஆகலின், அவ் வள்ளன்மை மிக்கானை இப்போழ்தே சென்றடைந்து நும் வறுமை ஒழிவீராக'' என்று பாணன் ஆற்றுப்படுத்தித் தமிழ் நாட்டில் இனவுணர்ச்சியையும் தன்னலமற்ற தன்மையையும் நிலை பெறுத்துதல் கண்டு உணர்வு பெறுவோமாக.

## உவமை நலம்

பண்டைப் புலவர் பெருமக்கள் உவமை யழகின்றி ஒரு பாடலேனும் பாடினரல்லர். அகப்பாடலினும் புறப்பாடலினும் உவமைகள் சிறந்து விளங்குதல் இயல்பே. ஆசிரியர் தொல்காப்பியனார், உவமை இன்றியமையாது வேண்டற்பாலது என்ற கருத்தினராவர் என்பதை உவமவியல் எனத் தனியே ஒன்றை வகுத்துள்ளமையால் அறியலாம். இற்றை நாளில் தொல்காப்பியர் கண்ட உவமையே பலவாறாக விரிவடைந்து பிறமொழிப் பெயர் தாங்கித் தமிழ்ப் புலவர் மதியை மயக்கா நிற்கின்றது. சிலர் தொல்காப்பியர் உவமை விரி கூறினாரில்லையெனக் குறை கூறி, வடமொழியைப் பெருமைப்படுத்தா நிற்பர். அவர் கூற்றுப் பொய்மையாம் என்பது, 'உவமை யென்னும் தவலருங்

கூந்தி பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து....'
எனும் நூற்பாவால் தெளிவுறும். இச் சிறுபாணாற்
றுப்படைக்கண் புலவர் நத்தத்தனார், கற்போர்
கருத்தை இன்புறுத்தும் நுட்பமான உவமைகளும்
உருவகங்களும் பல்லிடத்தும் கூறியிருப்பினும் அவை
யனைத்தையும் இவண் விளக்கிப் போதல் இயலாமை
யின், சிறந்த மூன்றினை மட்டும் குறிக்கின்றோம்.

பரிசில் பெற்ற பாணன் ஆற்றுவழி கூறுமிடத்து
மருதவளம் மிகுந்த ஆமூரைச் சுட்டுகின்றான். ஆண்டு
ஓர் உவமையினை நாட்டி உணர்வை எழுப்பும்
திறனை,

> "வள்ளுகிர் கிழித்த வடுவாழ் பாசடை
> முள்ளரைத் தாமரை முகிழ்விரி நாட்போது
> கொங்கு கவர்நீலச் செங்கட் சேவன்
> மதிசே ரரவின் மானத் தோன்றும்"
>
> [கஅஉ — கஅரு]

என்ற அடிகளில் காணலாம். புலவர் உவமை கூறு
கின்ற இரண்டு பொருளைத் தனித்தனி எடுத்து உரிய
இயல்புகளைப் புலப்படுத்தி ஒப்பிடுவர். இவண்
தாமரை வெண்மையா, செம்மையா என்பதைச் சுட்
டாது, பசிய இலை, முள், தண்டு முதலியவை கூறி,
வண்டு நீல நிறமும், சிவந்த கண்களும் உடைத்தாய்த்
தேனுகரச் சென்றது என்பதை இயற்கையொடு
பொருந்தக் கூறினார். உள்ளுவதெல்லாம் உயர்வே
உள்ளும் பண்புடையராதலின, நிலத்தின் நிகழ்ச்சி
யைத் தெளிவுறுத்த வானை நோக்கினார். வெண்
திங்களை அரவு சேர்தல் கண்டார். இஃது உலகோர்
யாவரும் அறிந்ததென மகிழ்ந்து பொருந்த உவமித்து
வெண் திங்கள் என்ற பொருளால் கரும்பாந்தள்

என்ற உவமையையும் உணர்த்தியது வியத்தற்குரிய தாம்.

இவ்வாறே, மணிவாசகப் பெருந்தகையும், பொருட்கண் ஒரு பண்பை மறைத்து உவமை முகத்தான் கூர்ந்தறியச் செய்யும் திறல் உடையார் என்பதை ஈண்டுச் சுட்டுதல் மற்றொன்று விரித்தலாகாதாம். அஃதாவது, 'ஈசற்கியான் வைத்த அன்பினகன்று ...' என்ற திருக்கோவைச் செய்யுளில் தலைவியின் கண்ணை ஈசற்கு உவமித்துக் காட்டுகின்றார். இப் பாடலுக்கு உரையெழுதப் பேராசிரியரின்றேல் இவ்வுவமையினை அறிந்து கோடல் மிக அரிதாம். என்னை ? 'கண்ணிற் கியல்பு கசடறக் கிளப்பின், வெம்மை கருமை செம்மையகலம் நீளம் ஒளியென நிகழ்த்துவர் புலவர்' எனும் கண்ணின் இலக்கண முறைப்படி ஆராய்கின்ற காலத்துச் செவ்வரிக்கு உவமை காணவில்லை. மணிவாசகப் பெருந்தகையைக் குற்றம் சொல்ல ஒருப்படுவரோ ? மாட்டார் ! 'அவண் தோளிற் பூசத் திருநீறு' என்றதினால் செம்மையும் கூறிற்று என்றார். எவ்வாறெனின், செம்மேனிப் பெம்மான் தோளில் வெண்ணீற்றைப் பூச, இடையிடை செம்மை புலப்படுமன்றே ? அஃதே கண்ணின் செவ்வரிக்கு உவமையாம் எனத் தம் நுண்மாண் நுழை புலத்தால் கண்டு தம்மை மகிழச் செய்தமை மறக்கற்பாலதோ ?

இனிக் கற்போர் உளம் சலிப்புறுவண்ணம் பிறிதோரிடத்து அமைத்துள்ள உவமை நலங் காண்பாம். அஃதாவது,

> " கடவுண் மால்வரை கண்டுவிடுத் தன்ன
> அடையா வாயில் அவ னருங்கடை"

[உ0—க]

என்பது. இவ்வுவமை, நல்லியக்கோடன் தலைநகராய மூதூர்க்கண் அமைந்த அரண்மனைக்குக் கூறப்பட்டது. ஈண்டுப் புலவர், வள்ளலது வானளாவ உயர்ந்து, உயர்வுக்கொப்ப வாயிலமைந்து, அடையாத வாயிலை யுடைத்தாய் இலங்குவதாகிய கோயிலை அண்ணுந்து நோக்கினர். இறும்பூதெய்தி உள்பொருளை உவமை கூற எண்ணி யாண்டும் அறிவுக் கண்ணைச் செலுத்தி ஞர். உயர்ச்சிக்கு உவமையாகக் கூறத் தகுவது உமையொடு பாகனுறையும் இமயமெனக் கண்டார். ஆனல், உயர்ந்த வாயிலுக்கு உவமிக்க அதனுள் ஒன் றும் அமையவில்லை. என் செய்வார் ? கற்பனையின் எல்லையை யடைந்தார்! இமயம் ஒரு கண்ணை விழித்துப் பார்த்தாலொப்ப உயர்ந்த அடையா வாயிலெனும் உவமை தோன்றிற்றெனின், அவர் உள்ளம் அடைந்த மகிழ்ச்சியினை யாவரே கண்டார் ? இத்தகு சிறந்த உவமையினைக் கண்டு இன்புறும் நம்மினும் பேறு பெற் ருர் தாம் யாவரே ?

இறுதியாக, ஓர் உவமை கூறி நிறுத்துவாம். பாணன் கையில் கொண்ட யாழின் இலக்கணந் தெரிக்குமிடத்து நம் வாழ்வில் கண்ணுறும் பொருளைச் சுட்டி உள்ளத்தை உவகைக் கடலுள் ஆழ்த்தும் புல மைத் திறம் உணரலாம். அஃதாவது,

*" பைங்க ணூகம் பாம்புபிடித் தன்ன*
*அங்கோட்டுச் செறிந்த வவிழ்ந்துவீங்கு திவவின்"*

*[ ௨௨௧—௨ ]*

என்பது. இதன்கண் குரங்கின் உள்ளப் பண்பை, யாழ் செறிக்கும் இசைவல்லோன் செயலோடு ஒப்பிட்டுக் காட்டும் ஆற்றல் நெஞ்சினை ஈர்க்குந் தகையது.

இன்றும் யாம் நேரில் காண்கிறோம். எந்நாட்டிலுள்ள குரங்கின் இயல்பும் அஃதே. என்றும் உலகில் நிலை பெறும் பண்பைத் தம் கவியில் நிறுத்தும் புலவனன்றோ இயற்புலவன்! பசிய பண்களையுடைய குரங்கு, பாம்பின் தலையைப் பிடிக்கவும் கையில் சுற்றிக் கொள்கிறது. சிறிது பொழுதில் அதன் தலையை விட்டு மீண்டும் பிடிக்கின்ற காலத்து அப்பாம்பு ஒருகால் இறுகவும், ஒருகால் நெகிழவும், அதன் கையைச் செறியச் சுற்றுதல் போல, யாழின் தண்டினிடத்தே செறியச் சுற்றின நரம்பை மீண்டும் செம்மைப்படுத்த நரம்பு துவக்கும் வார்க்கட்டினை யாழ் வல்லோன் பிடிக்க, நெகிழ வேண்டுமிடத்து நெகிழ்ந்தும் இறுகவேண்டுமிடத்து இறுகியும் வருதலைக் காணலாம். இவ்வுவமையின் அழகினை என்னென்பது!

## தமிழர் பண்பாடு

தமிழர் பண்பாடுகள் சங்கநூல்களனைத்திலும் பரந்து காணப்படினும், இந் நூலகத்துச் சிறந்த பண்பாடுகள் கூறப்பட்டுள்ளன. அவற்றையெல்லாம் விளக்கிப் போதல் அருமையுடைத்தாதலின், தமிழர்களின் விருந்தோம்பும் பண்பை மட்டும் சுட்டுகிறேன். விருந்து எனும் பண்பு தமிழனுக்கே உரியது.

> *'மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து*
> *நோக்கக் குழையும் விருந்து'*

என்ற இலக்கணமறிந்து செயலாற்றுபவன் தமிழன். விருந்தினரைப் புறத்தே வைத்துத் தானுண்ணும் சிறுமதி கொண்டவனல்லன் தமிழன். பகுத்துண்டு வாழ்தலைச் சிறப்பாகக் கொண்டு வாழ்பவன். இத்தகைய தமிழர் பண்பு ஈண்டு ஒரு வறுமையுற்ற பாணன்பால் குன்று திருத்தலைக் காண்மின்.

'வறுமைக்கு அறிகுறியான காட்சிகளெல்லாம் நிறைந்து விளங்கும் புலவர் இல்லம். நெடுநாள் மனைவியும் தானும் உண்டியின்றிக்கழியும் வாழ்க்கையர். என்பெழுந்திரங்கும் யாக்கையராய் இயங்குகின்றனர். பசி மிகுதியும் வருத்துதலினால் குப்பை வேளையைக் கிள்ளி உப்பின்றி அடுதல் செய்தாள் மனைவி. அத்தகைய வறுமை நிலையிலும் செம்மை நெறி தவறாது விருந்தினராய் ஒக்கலொடு உண்டு மகிழ்ந்தனர்' என்று வரையப்பட்டுள்ளது. இதனால் உயிர் போமளவும் விருந்தினரைப் பேணுதலில் தவறார் என்பதும், எளிய உணவாயினும் பகிர்ந்துண்டு மகிழ்ந்து வாழும் பண்பினர் என்பதும் தெரிகின்றன. இங்ஙனம் விருந்தோம்பும் நெறிபிழையாதார் எந்நாளும் பசிப்பிணியின்றி நலம் பெறுவர். தொலையா நெடுவழியிற் சென்ற காலத்திலும் நல்லுண்டி பெறுவர் என்பது உறுதி. இடைக் காலத்தில் விருந்து எனும் சிறந்த பண்பு மாறியது. ஆற்றுநர்க்கு அளிப்போர் அறத்தை விலைக்கு விற்போராவர் என்பதை அறியாது, சூழ்ச்சியால் வாழ்பவர்க்கே விருந்தூட்ட முற்பட்டனர். மணிமேகலையிற் கூறியுள்ள,

' ஆற்றா மாக்கள் அரும்பசி களைவோர்,
மேற்றே யுலகின் மெய்ந்நெறி வாழ்க்கை '

எனும் உண்மையை மறந்து வாழ்வாராயினர். இளங்கோவடிகள்,

'அறவோர்க் களித்தலும் அந்தண ரோம்பலும்,
துறவோர்க் கெதிர்தலும் தொல்லோர் சிறப்பின்,
விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை'

எனக் கண்ணகி கூற்றாகச் சிறப்பிக்கும் விருந்தினை உளங் கொண்டிலர். இதை யுணர்ந்த அருணகிரியார்,

பத்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய பாட லின் இடையே, விருந்தின் மேன்மையைச் செறித்து வற்புறுத்தியுள்ளமை, இந் நூலின் கருத்தோடு ஒற்று மைப்பட் டிருத்தலைக்காண உள்ளம் மகிழ்வால் பொங்கு கிறது. அஃதாவது,

*" மலையறு கூறெழ வேல் வாங்கினானை வணங்கியபின்*
*நிலையான மாதவம் செய்குமினோ நும்மை தேடிவரும்*
*தொலையா வழிக்குப் பொதிசோறும் உற்றதுணையும்*
*[கண்டீர்*
*இலையாயினும் வெந்ததேயாயினும் பகிர்ந்தேற்ற*
*[வர்க்கே "*

என்பது. இப் பாடல் சிறுபாணாற்றுப்படைக்கே பாடி யாதோவென நினைக்குமாறு கருத்துக் கொண்டமை காண்க. பாணன் மனைவியுடன் இல்லிருந்து வெந்த கீரையைப் பகுத்துண்டு, பரிசில் வேட்டுச் செல்லுங் கால், தொலையா நெடுவழி எங்ஙனும் அமலை வெண் சோறு விருப்புடன் அழைத்துக் கொடுக்கப் பெற்றன னன்றோ ?

## முடிவுரை

இதுகாறும் கூறியவற்றால், தமிழ் எழுவள்ளல் களின் அருஞ் செயல்களும், ஐந்திணை வளங்களும், ஆங்குள்ள மக்களின் வாழ்க்கை முறைகளும், பாண னுடைய புலமையும், பாட்டுடைத் தலைவனாகிய நல் லியக் கோடனுடைய கொடைத் தன்மையும், மறத் தன்மையும், அவன் பாணர் முதலியோர்க்குப் பரிசில் நல்கும் அருமையும், உவமை நலமும், தமிழர் பண் பாடும் விளக்கமுறக் கண்டோம். ஓவியர் குடியிற் பிறந்த பெருமகன் தன் குடிப் பெயராலும் அரும்பண்

பாலும் '**ஓவியர் பெருமகன்**' என்று புகழ்ந்து பாடப் பட்டிருப்பது மிகவும் பொருத்தமுடைய தன்றோ? இவ் வள்ளியோன் போன்றார் வரலாற்றினை ஆர்வ முடன் பயின்று பண்பாடு பெறல் இன்றைய தமிழகத் தார் வாழ்விற்கு வளந் தருவதாகும் என்பதைச் செல்ல வும் வேண்டுமோ ?



# தோழமைச் செல்வம்

## வாழ்த்துச் செல்வம்

'பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க' என்பது பழந்தமிழ் வாழ்த்து. மணக்கோலத்திற் காணும் இருவரையும் இம்முறையிலே வாழ்த்துவதை இன்றும் கேட்டு மகிழ்கின்றோம். ஆனால், அவ் வாழ்த்துமொழியின் உண்மைப் பொருளை அறிந்தோர் சிலரே. பெரும்பான்மையோர், 'பதினாறு மக்களைப் பெற்று வாழ்க!' என்பதே அதன் பொருள் எனக் கருதியுள்ளனர். இன்னும் சிலர், 'மார்க்கண்டேயனைப் போன்று என்றும் பதினாறு வயதாக வாழ்க!' என்றும் பொருள் கொண்டுள்ளனர். தமிழ்ச் சான்றோர்கள், 'பதினாறு மக்களைப் பெற்று வாழ்க!' என்று கருதி யிருப்பார்கள் என்று நினைப்பதற்கே முடியவில்லை. புராணக் கதையில் வருகின்ற மார்க்கண்டேயன்

வாழ்வை மணமக்கள் வாழ்வோடு ஒப்பிட்டுக் காணுங்கால் சிறிதும் பொருந்துவதாக இல்லை. ஆகவே, தமிழ்ப் பெரியோர் கருதிய பொருள் வேறொன்றாகவே இருத்தல் வேண்டும். பதினாறு என்று வரையறைப் படுத்தி, 'உம்' என்ற முற்றும்மை தந்து கூறியிருப்பது பதினாறு வகைப்பட்ட செல்வங்களைக் குறிப்பதாகும். 'இல்லற வாழ்விலே புகும் இள மணமக்கட்கு ஒரு குறைவுமில்லாமல் எல்லாச் செல்வமும் உண்டாவதாக!' என்பதே பொருளாம்.

## பதினாறு வகைச் செல்வங்கள்

தமிழர் கண்ட செல்வங்கள் கணக்கில. அவற்றுள் வாழ்க்கைக்கு இன்றியமையாத செல்வங்கள் பதினாறு எனத் தேர்ந்திருக்க வேண்டும். அவற்றுள்ளும் உடல் வளர்ச்சிக்கும், உள்ள வளர்ச்சிக்கும் ஏற்றவை இன்ன எனப் பகுத்திருக்க வேண்டும். அவற்றுள்ளும் அழியுந் தன்மையன, அழியாத் தன்மையன இன்னவெனவும் கருதியிருக்க வேண்டும். மண், பொன், மணி முதலிய செல்வங்களும், அன்பு, அருள், தோழமை முதலிய செல்வங்களும் அப் பதினாறு வகையுள் அடங்கியிருக்க வேண்டும். அப் பதினாறு செல்வங்களுள் அழியுந் தன்மையன; இம்மையில் மட்டும் ஒன்றிநின்று பயன் விளைப்பன; அழியாத் தன்மையவாய செல்வங்கள் இருமைக்கும் பயன் விளைப்பன என எண்ணுமாறு வாழ்விற்கு வரையறுத்திருக்க வேண்டும்.

## அன்பே தலை

இவ்வாறு வரையறுக்கப்பட்ட செல்வங்கள் பதினாறனுள் முதலாவது இடத்தைப் பெறுவது அன்பு எனும் பண்பாகும். பண்பினையும் செல்வமாகக் கருதிப் போற்றும் மரபு தமிழருடையதாகும். தெய்வப் புலவர்

திருவள்ளுவரும் நிலம், பொன், மணி முதலியவற்றை மட்டும் செல்வம் என்று குறிக்காமல், கல்வி, கேள்வி, மக்கள், அருள் முதலியவற்றையும் செல்வம் என்று குறித்திருத்தல் சிந்தித்தற்குரியதாகும். பொருளைச் செல்வம் என்று கருதியமைக்குப் பல இடங்களில் சான்றுகள் உள்ளன. செல்வத்தைச் செல்வம் என்றே குறித்துள்ளமைக்கும் பல குறள்கள் காணக் கிடக்கின்றன. 'பொருள் செயல்வகை' என்ற அதி காரத்தில் வரும்,

> " *பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்*
> *பொருளல்ல தில்லை பொருள்* "

என்பதில், பொருள் என்ற சொல், செல்வத்தை யுணர்த்தி நிற்பது காணலாம். அதே போன்று, 'ஒப்புரவறிதல்' என்ற அதிகாரத்தில் வரும்,

> " *பயன்மர முள்ளூர்ப் பழுத்தற்றுற் செல்வம்*
> *நயனுடை யான்கட் படின்* "

என்பதில் செல்வம் என்ற சொல்லே செல்வத்தைக் குறிக்க வெளிப்பட வந்தமை அறியலாம். இவ்வாறே, 'கல்வி' என்ற அதிகாரத்தில்,

> " *கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு*
> *மாடல்ல மற்றை யவை* "

என்றும், 'மக்கட்பேறு' என்ற அதிகாரத்தில்,

> " *தம்பொருள் என்பதம் மக்கள் அவர்பொருள்*
> *தந்தம் வினையான் வரும்* "

என்றும், 'அருளுடைமை' என்ற அதிகாரத்தில்,

> " *அருட்செல்வம் செல்வத்துட் செல்வம் பொருட்செல்வம்*
> *பூரியார் கண்ணு முள* "

என்றும், 'கேள்வி' என்ற அதிகாரத்தில்,

> " *செல்வத் துட் செல்வஞ் செவிச்செல்வம் அச்செல்வஞ்*
> *செல்வத்து ளெல்லாந் தலை* "

என்றும், குறித்துள்ளமை காணலாம். கல்வியை **'விழுச் செல்வம்'** என்றும், மக்களைத் **'தம் பொருள்'** என்றும், அருள் என்ற பண்பை **'அருட் செல்வம்'** என்றும், கேள்வியைச் **'செவிச் செல்வம்'** என்றும் அமைத்திருப்பது நோக்கற்பாலது. வள்ளுவப் பெருந் தகையும் மக்கள் வாழ்க்கைக்குச் சிறந்தவற்றை வரை யறுக்க எண்ணினர் போலும்!

## அருளே இறுதி

செல்வங்கள் எனப் பலவும் குறிக்கப்படினும் மக்கள் வாழ்க்கை அன்பிலே தொடங்கி அருள் உருப் பெற்றுச் சிறப்புறுவதாகும். அன்பு என்ற பண்பும் ஒரு செல்வமே. அச் செல்வம் இல்லாதார் பிணத்தோ டொப்பார். அன்பை முதலாகக் கொண்டு அதன் வழி நின்ற உடம்பே உயிர் நின்ற உடம்பாகும். ஆகவே, அன்பு எனும் பண்பிலார் உயிரில்லாதவரே. உயிர் வாழ்க்கைக்கு அடிப்படை அன்புச் செல்வமே. இக் கருத்தை 'அன்புடைமை' என்ற அதிகாரத்தின் இறுதியில்,

> *" அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்கு*
> *என்புதோல் போர்த்த வுடம்பு "*

என்ற குறளால் குறிப்பித்துள்ளமை காணலாம். அன்பிற்கும் அருளுக்கும் உள்ள உறவை வள்ளுவர் குறளில் உணர்த்தியிருப்பது போல, உரையாசிரியர் பரிமேலழகரும் அழகு பெற விளக்கியிருக்கின்றார். "அன்புடைமை என்பது வாழ்க்கைத் துணையும் புதல் வரும் முதலிய தொடர்புடையார்கண் காதலுடைய னாதல்; இல்லறம் இனிது நடத்தலும், பிறவுயிர்கள் மேல் அருள் பிறத்தலும் அன்பின் பயனாகும்" எனக் குறிப்பிட்டுள்ளார். அருள் பிறத்தற்கு அன்பு காரணம் என்பது பெறப்பட்டது. வள்ளுவர் அருளுடைமைக்

கும் அன்புடைமைக்கும் உள்ள தொடர்பைப் 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்துள்,

> " அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும்
> செல்வச் செவிலியா லுண்டு "

எனக் காட்டியுள்ளார். அன்பைத் தாயாகவும், அருளைக் குழந்தையாகவும், செல்வத்தை வளர்ப்புத் தாயாகவும் கூறியிருப்பது பெரிதும் பொருந்துவ தாகும். இந்த உண்மையை உணர்ந்த பரிமேலழகர், " அருளுடைமையாவது தொடர்புபற்ருது இயல்பாக எல்லா வுயிர்கள் மேலும் செல்வதாகிய கருணை. இல்லறத்திற்கு அன்புடைமை போல இது துறவறத் திற்குச் சிறந்தது " என உரை கண்டிருக்கிருர். துற வறம் என்பது இல்லற வாழ்வின் இறுதி நிலை என்று ஒருவாறு பொருள் கொள்ளலாம். ஏனைய சமயத்தினர் கொள்ளும் துறவு நிலை போன்றதன்று. பரிமேலழகர் தமிழர்களின் துறவறத்தின் உண்மையை அறிந்து, " துறவறமாவது இல்லறத்தின் வழுவாதொழுகி அறிவுடையராய்ப் பிறப்பினை அஞ்சி வீடு பேற்றின் பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம் " என்று எழுதியுள்ளார். வாழ்க்கையின் தொடக்கம் இல்லற மாகவும், இறுதி துறவறமாகவும் அமைவதே அன்பு முதலாக அருள் ஈருக அமைந்த வாழ்வாகும் என்பது தெளிவாகிறது.

## அன்பு - தோழமை - அருள்

அன்பு முதலாகவும் அருள் இறுதியாகவும் கொண்டிலங்கும் வாழ்க்கைக்கு இன்றியமையாதன பதினறு செல்வங்கள் எனக் கண்டோம். அப்பதினற னுள் அன்பு, அருள் இரண்டினையும் இணைப்பதற்குப் பாலம் போன்று நிற்பதாகிய ஒரு சமநிலைப் பண்பு அன்பிலே பிறந்து அருளைப் பிறப்பிக்கின்றது. அன்பைத் தாயாகவும், அருளைக் குழந்தையாகவும்,

அப்பண்பை வளர்ப்புத் தாயாகவும் கொள்ளலாம். அன்பைத் தாயாகவும், அப்பண்பைத் தந்தையாகவும், அருளைக் குழந்தையாகவும் கொள்ளினும் பொருந்தும். அம்மையும் அப்பனும் பிள்ளையும் சேர்ந்து விளங்கும் இறையுருவம் போன்று வாழ்க்கை அன்பு-தோழமை-அருள் உருவாக விளங்குவது என்று கருதலாம்.

## தோழமைச் செல்வம்

அன்பு, அருள் என்ற இரண்டிற்கும் நடு நாயக மணியாய் விளங்கும் தோழமைச் செல்வத்தைப் பற்றி அறிய வேண்டுவது மிகவும் இன்றியமையாததே. வள்ளுவர் அன்பின் சிறப்பினைக் கூறுமிடத்து நண்பு எனும் பண்பைச் சுட்டுகின்றார். நண்பு என்பது நட்பு. கேண்மை, நட்பு, தோழமை என்பன ஒரு பொருளை யுணர்த்தும் பல சொற்கள். அன்பிற்கும் நட்பிற்கும் எத்தகைய தொடர்பு என்பதை,

> *" அன்பீனும் ஆர்வ முடைமை அதுவீனும்*
> *நண்பென்னும் நாடாச் சிறப்பு "*

என்ற குறளால் அறியலாம். ஒருவன் செய்த அன்பு பிறரிடத்து விருப்பமுடைமையைத் தரும். அவ் விருப்பே பகையும் நொதுமலு மில்லாமல் யாவரும் நண்பென்று சொல்லப்படும் அளவிறந்த சிறப்பினைத் தரும். நண்பு என்பது அன்பினின்றும் பிறப்பது. அது அருளைக் காண்பதற்குக் காரணமாக இடைநின்று விளங்குவதாம். வள்ளுவர் அன்புடைமை என்ற அதிகாரத்தில் நண்பின் பிறப்பைச் சொல்லிய தோடு அமையாது, நட்பு, நட்பாராய்தல், பகைமை, தீ நட்பு, கூடா நட்பு முதலாய பதினேழு அதிகாரங் களிலும் வற்புறுத்துவதும் குறிப்பிடத் தக்கதாம். வேறு எந்தப் பொருளையும் இத்தனை

அதிகாரங்களால் ஆசிரியர் விதந்து கூறினரிலர். ஆயின், நட்பு என்ற பண்பைப்பற்றி இவ்வாறு கூறியமைக்குக் காரணம், அன்பிற்கும் அருளுக்கும் நடுவண் விளங்கும் சிறப்புக் கருதியேயாம். வள்ளுவர் அன்பு, நண்பு, அருள் என்ற மூன்றினையும் தொடர்புபடுத்தி ஓரிடத்தே கூருது போயினும், ஊன்றி நோக்குவார்க்கு அவற்றின் தொடர்பும் இன்றியமையாமையும் எளிதிற் புலப்படும். நண்பு என்பது நட்பு, கேண்மை, தோழமை என்ற பெயரால் இலக்கியங்களில் வழங்கி வருகின்றது. வள்ளுவர் தம் குறட்பாவில் தோழமை என்ற சொல்லால் குறிக்காமல் நட்பு, கேண்மை என்ற சொற்களாலே குறித்துள்ளார். உயிர் வாழ்வார்க்கு அன்பு, நண்பு, அருள் ஆகிய முப்பெரும் பண்பும் உயிரோடு பின்னிப் பிணைந்து நிற்பன என்னலாம். உயிர் நிலை, அன்பின் வழியது என்றும், அருள் என்னும் அன்பீன் குழவி என்றும் குறிக்கப்பட்டிருக்கும் உண்மைகளை ஆராய்ந்தால் தெளிவாக உணரலாம்.

## தோழமையே துலாக்கோல்

அன்பு, அருள் இரண்டும் இரு பக்கமுள்ள துலைத் தட்டுகள் என்ருல், தோழமையை நடுவு நிற்கும் கோல் என்னலாம். சமன் செய்து சீர்தூக்கி அனைவரையும் ஒன்றுபடுத்தப் பிறந்த பண்பே தோழமை. பதினறு வகைப்பட்ட செல்வங்களுள் அழியாத் தன்மையுடையதும், அன்பு, அருள் இரண்டையும் பிணைத்து நிற்பதும், பன்மையில் ஒருமை காட்டி நிற்பதும் தோழமை என்ற பண்புச் செல்வமாகும். 'பதினறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க !' என வாழ்த்திய தமிழ்ச் சான்ருேர் இச்செல்வத்தை மறவாது தம் இலக்கியங்களில் போற்றிவந்தமையைக் காணுதல் நன்மை பயப்பதாகும். செல்வத்துட் செல்வம் தோழ

மைச் செல்வம் என்று சிறப்பித்துக் கூறும் பான்மையில் புலவர் பெருமக்கள் அப் பண்போடொழுகிப் பாடியுள்ளமை அதன் பெருமைக்குச் சான்றாகும்.

### தோழமை ஆட்சி

தோழமைச் செல்வம் பண்டைப் பெரியோர்களால் எவ்வாறு போற்றப்பட்டு வந்தது என்பதற்குத் தொல்காப்பியம், புறநானூறு முதலிய சங்க நூல்களையும், சீவக சிந்தாமணி முதலிய காப்பிய நூல்களையும், பெரியபுராணம் முதலிய புராண நூல்களையும், தேவாரம், திருவாய்மொழி, அருட்பா முதலிய சமய நூல்களையும், சிற்றிலக்கியங்களையும் ஆராய்ந்து காணுதல் வேண்டும்.

### தொல்காப்பியத்திலே

தோழமை என்ற சொல்லின் தோற்றம் தமிழின் தோற்றத்தோடொத்தது. தமிழ் என்ற சொல்லைத் தமிழர் நுணுகிக் கண்டாற்போலவே, தோழமை என்ற சொல்லையும் கண்டிருக்க வேண்டும் எனக் கருதலாம். தோழன், தோழி என்ற சொற்கள் இற்றைக்கு மூவாயிர மாண்டுகட்கு முன்னர் யாத்ததாகக் கருதப்படும் தொல்காப்பியத்துள் காணப்படுகின்றன. ஒவ்வொரு சொல்லிற்கும் தனியிலக்கணம் வகுப்பதென்பது இயலாது. எனினும், இவ்விரு சொற்களுக்கும் தனித் தனியே நூற்பா அமைந்திருப்பது அவற்றின் உயர்வைப் புலப்படுத்துவதாகும்.

*'' எல்லாவும் ஏலாவும் **தோழன்** முன்னிலைப் பெயர் ''*

எனவும்,

*'' **தோழி** தானே செவிலி மகளே ''*

எனவும் வரும் நூற்பாக்களே போதிய சான்றாகும்.

தோழமைப் பண்பையுடைய ஆடவன் தோழனாவான். அப்பண்பையுடைய பெண் தோழியாவாள். இவ்விருவரும் சங்க நூல்களில் எத்தகைய இடத்தைப் பெற்றுள்ளார்கள் என்பதைப் பார்க்க வேண்டும். அகப்பொருள் உணர்த்தும் நூல்களுள் செவிலியின் மகளாகச் சொல்லப்படுபவளே தோழியாவாள். செவிலி என்பவள் தலைவியின் தாயினும் சிறந்தவளாக மதிக்கத் தகுந்தவள். ஈன்ற தாயைக் காட்டிலும் களவின்கண் சிறந்து விளங்குவதே அதற்குக் காரணம். ஆசிரியர் தொல்காப்பியரும்,

> " ஆய் பெருஞ்சிறப்பின் அருமறை கிளத்தலின்
> தாயெனப் படுவோள் செவிலியாகும் "

எனச் செவிலிக்கு இலக்கணங் கூறியுள்ளார். " தாயத் தாய்க்கொண்டு உயிர் ஒன்றாய் வருகின்றாளென்று ஆராய்ந்து துணியப்பட்ட பெருஞ்சிறப்புக் காரணமாகக் கூறுவதற்கரிய மறைப்பொருளெல்லாம் குறிப்பானன்றிக் கூற்றால் கூறத்தக்காளாதலின் தாயென்று சிறப்பித்துச் சொல்லப்படுவோள் செவிலி" என உரை கூறப்பட்டுள்ளது. தொன்று தொட்டு வருகின்ற உரிமையும் மதிப்பும் உடையவள்; உயிரோடு பிணைந்த பெருங்கிழமைத்தன்மை யுடையவள்; மறைப் பொருளெல்லாம் வெளிப்படக் கூறி உதவும் நீர்மையள்; களவுக் காலத்துத் தலைவிக்கு ஈன்ற தாயினும் சிறந்தவள். இப் பெற்றி வாய்ந்த செவிலியின் மகளே தோழி. அவளுடைய தன்மையைக் கூறவந்த ஆசிரியர் தொல்காப்பியனார்,

> " தோழிதானே செவிலி மகளே "

எனக் கூறினர். அஃதாவது தோழியர் பலருள்ளும் ஒருத்தி எனப் பிரிக்கப்படுவாள் செவிலி மகளே. தலைவியும் தோழியும் தாயத்தாய்க் கொண்டு வருகின்ற

மையின் உழுவலன்பு போல்வதோர் அன்புடையர். களவுக் காலத்துத் தோழியே தலைவிக்கு மிகச் சிறந்த வளாக விளங்குவாள். அம்முறையில் தோழனும் உரிமையும் மதிக்கற்பாடும் உடையவனாய், உழுவலன்புடையவனாய் உயிர்போன்றொழுகுபவன். ஆகவே, தோழமைப் பண்பையுடையவர்களே தோழன்-தோழி என்று அழைக்கப்பட்டு வந்தார்கள் எனத் தெரிகிறது.

## இலக்கியத்திலே

தோழன் என்ற சொல் தலைவனையும், அவனுக்குத்துணை நின்றுதவும் நண்பனையும் ஒருசேர உணர்த்துவதும், தோழி என்ற சொல் தலைவியையும், அவளுக்குத் துணை நின்றுதவும் பெண்ணினையும் ஒருசேர உணர்த்துதலும் இலக்கியங்களில் காண்பன. தோழி என்ற சொல் அரசனது தேவியையும், பணிப் பெண்ணையும், மணப் பெண்ணையும், தலைவியையும், செவிலி மகளையும் உணர்த்துகின்றது.

" பொற்றொடிப் பணைத்தோள் தோழியர் "

எனப் பெருங்கதையில் வருவது அரசனது தேவியர்களைக் குறிக்கின்றது.

" வேம்பின் பைங்காய் என்தோழி தரினே
தேம்பூங்கட்டி என்றனிர் "

என வரும் குறுந்தொகைப் பாடலில் தலைவனிடம் தலைவியைத் தோழி எனக் கூறக் காண்கிறோம். தோழிப் பொங்கல் என்ற ஒரு விழா நடைபெறும் வழக்கம் குறிக்கப்படுகின்றது. திருமண முடிந்த நான்காவது நாளில் மணமகளது தாய்மாமன் தனது செலவில் மணமகட்கு மட்டும் சிறப்புச்செய்து ஊர்வலம் முதலிய நடத்துதலாம். இங்குத் தோழி என்ற சொல் மணமகளைக் குறிப்பது காணலாம்.

மாப்பிள்ளைத் தோழன் என்று இன்றும் மண நாளில் மணமகனுக்குத் துணைவனாக நிறுத்து கின்றார்கள். மணமகனுக்குச் செய்யப்படும் எல்லாச் சிறப்பும் மதிப்பும் அத் தோழனுக்கும் செய்ய வேண்டும் என்பது மரபு. இங்குத் தோழன் என்பது மணமகனுக்குத் துணையாக இருப்பவரை மட்டும் குறித்து வழங்கக் காண்கின்றோம். ஆகவே, தோழ மைச் செல்வம் தொல்காப்பியத்தில் உயர்ந்த நிலையில் கூறப்பட்டிருத்தல் தெளிவாகிறது. தோழமைப் பண் பையுடைய தோழி என்பது அரசன் தேவிக்கும், காதல் தலைவிக்கும், செவிலி மகளுக்கும், பணிப்பெண்ணிற் கும் உரிமையாயிருப்பது, 'எல்லாரும் ஒரு நிறை,' என்ற கொள்கையை நிலைநாட்டுவதற்குக் காரண மாகியது; தோழமை என்ற போது, உயர்வு-தாழ்வு மறைகின்றது; ஆண்டான் - அடிமை அகல்கின்றது; சாதி வேறுபாடு தகர்கின்றது;

"யாதுமூரே யாவருங்கேளிர்"

என்ற தன்னலம் நீங்கிய பொதுமையுணர்வு பொங்கு கிறது. இத்தகைய சொல்லினை ஆய்ந்துகண்ட அருந் தமிழ்ச் சான்றோரின் நுண்மாண் நுழைபுலந்தான் என்னே என்று உள்ளம் இறும்பூது கொள்ளு கின்றது!

## புறநானூற்றில் தோழமை

தொல்காப்பியங் கண்ட தோழமைப் பண்பை அதற்கு ஆயிரமாண்டுகட்குப் பிந்திய புறநானூற்றில் மறவாது போற்றியிருப்பதைக் காணலாம். சங்க மரு விய நூல்களில் சிறப்புடையது புறநானூறு. அதன் கண் கபிலர் என்னும் புலவர் பெருமானால் மனம் உருகிப் பாடிய பாடலொன்றில் அப் பண்பு வெளிப் படக் கூறப்பட்டுள்ளது. பறம்புநாட்டுக் கோமானும்

கடையெழு வள்ளல்களில் தலைசிறந்தோனுமாகிய பாரியின் உயிர் நண்பர்—அரசவைப் புலவர்—கபிலர். தமிழ் நாட்டு மூவேந்தரும் பறம்பு நாட்டை முற்றுகை யிட்டுப் பாரியைக் கொன்று வஞ்சந்தீர்த்தனர். பாரி யின் மகளிரைக் காப்பது யார் ? தந்தையை இழந்து தவிக்கும் அவர்களைக் காக்கும் பொறுப்பை ஏற்பார் யார் ? அவரே பாரியின் உயிர்த் தோழராக இருக்க முடியும். கேடு வந்துற்றபோது கிளைஞராய் நின் றுதவ வல்லார் எவரோ, அவரே உண்மைத் தோழ ராவார். அந்த இலக்கணத்திற் குன்றுமல் பாரியின் மக்களைக் காத்து மணவினை செய்து வைக்கும் பொறுப்பை ஏற்றுக்கொண்டவரே நம் புலவர்பெருமா ஞகிய கபிலர். அவருக்கும் பாரிக்கும் இடையே நின்ற தோழமையைக் கபிலரே வாய்விட்டுச் சொல் லும் அரிய வாய்ப்பும் ஏற்பட்டது. அவ் வாய்ப்பே தோழமைச் செல்வத்தின் பெருமையை நாம் அறிந்து வியக்குமாறு புறநானூற்றில் அமைந்துள்ளது.

## பாரியும் கபிலரும்

பாரி மகளிரைக் காத்துவந்த கபிலர் அவர்கட்குப் பருவம் எய்தவும் மணமுடித்து வைக்க எண்ணினர். 'மகட் கேட்போர் ஒருவரையும் காணேம். உலகத்து முறை மகட் கேட்கக் கொடுப்பதே யல்லாமல், மகளைக் கொள்க என்று இரந்து கொடுப்பதன்று' என்று கபிலர் மிகவும் மனவருத்தமுற்று அவர்களை அழைத் துக்கொண்டு இரு வேந்தர்களிடம் செல்ல நினைந் தார். தமிழகத்தின் பெருங்கொடையாளியின் மக்களை விரும்பி மணக்க வருவார் இல்லாமை நினைந்து நாணிய அவர், கடமையை நிறைவேற்றுங் கருத் துடன் முதலாவதாக, விச்சிக்கோ என்ற அரசனிடம் அழைத்துச் சென்றூர். அவனுடைய நாட்டின் சிறப் பினையும்பெருந்தகைமையினையும்இயைத்துப் பாராட்டி

மணந்து கொள்ள வேண்டினர். அவனே முப்பெரும் வேந்தர்களின் பகையுண்டாமெனக் கருதியோ, பெற்றோரில்லா அனாதைகளை மணப்பது அரசர்க்கு மரபன்றென எண்ணியோ அவர்களை மணந்து கொள்ள மறுத்துவிட்டான். அதன் பிறகு இருங்கோவேள் என்ற அரசனை அண்மினர். அவன்பால் முன்னர்க் கூறியதைவிட உளம் நைந்து உரிமையுணர்ச்சியுடன் உருக்கமாக எடுத்து மொழிந்தார். பாரி மகளிரை மணந்து இன்புற வேண்டினர். அவன்பால் பாரியோடு கொண்டிருந்த தோழமைப் பண்பை அவர் வெளியிடும் அருமையைக் கீழே குறிப்போம் :

*" இவரியார் என்குவை யாயின், இவரே*
*ஊருடன் இரவலர்க் கருளித் தேருடன்*
*முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்*
*படுமணி யானைப் பறம்பிற் கோமான்*
*நெடுமாப் பாரி மகளிர் !* **யானே**
**தந்தை தோழன் ! இவர் என் மகளிர்**
*அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே"**

"இருங்கோவேளே ! இவர்களை யாரென்று கேட்பாயாயின், இவர்கள் தாம் முந்நூறு ஊர்களையும் தம்பால் வந்த பரிசிலர்க்கு வழங்கியவனும், முல்லைக் கொடிக்குத் தேரை நிறுத்திக் கெடாத நற்புகழ் வாய்ந்தவனும், பறம்பு நாட்டின் கோமானும் ஆகிய பெருமை குன்றாப் பாரிவள்ளலின் அருமை மக்கள். யானே, இவர்களின் தந்தைக்கு உற்ற தோழன். அதனால் இவர்கள் என்னுடைய மகளிராவர். அந்தணனாகவும் புலவனாகவும் விளங்கும் யான் இவர்களை நீ மணந்து கொள்வான் வேண்டி உன்பால் கொணர்ந்தேன்" என்று உரிமையுணர்வால் உந்தப்பட்டு உள

* புறம், 401.

நெகிழக் கூறினர். இவர் கூறிய "யானே தந்தை தோழன் இவர் என் மகளிர்" என்ற அடியிலுள்ள ஒவ்வொரு சொல்லையும் ஆழ்ந்து நோக்குதல் வேண்டும். பாரியோடு வடக்கிருந்து உயிர் போக்காமல் அவன் மகளிரைக் காக்கும் பொருட்டே உயிர் வாழ்ந்தவர் ; பாரியின் இணைபிரியா நண்பர்; புலமை காரணமாகத் தோழராகியவர்; பாரியின் அவைக் களத்தை அழகு செய்தவர்; அம் மகளிரிருவரையும் பாரி இறந்த பின்னரும் மறவாது தம் மக்களைப்போல எண்ணியவர். பாரி இறந்ததும் அவனை மறந்து வாழ நேர்ந்திருக்குமாயின் தோழமை என்ற பண்பிற்கு இடமில்லை. தம்மைத் "தோழன்" என்றும் பெருமிதமாகக் கூறி மகிழ்ந்திருக்க மாட்டார். தோழமையை மறந்து வாழ்வது என்பது புலவர்களுக்கு முடியாத தொன்று. அன்றியும், இருங்கோவேளிடம் கூறுகின்றபோது, அவ்விருவருக்கும், 'யானே தந்தை' என்ற பொருள் பயக்குமாறும், 'பாரிக்கு உயிர்த் தோழன் யானொருவனே,' எனப் பொருள்படுமாறும் கூறியிருப்பது தோழமைச் செல்வத்தின் உயர்வை எண்ணுமாறு செய்கிறது. அம்மட்டோ ! "இவர் என் மகளிர்" என்று மீண்டும் தம் மக்களாகவே கருதிக் கூறும் சொற்கள் உண்மைத் தோழன் என்பதற்கு எடுத்துக்காட்டு இவரே எனக் காட்டுபபோல் நிற்கின்றன. இவர் என் மகளிர் என்று கபிலர் சொல்லும்போது சாதி வேறுபாடோ, உயர்வு-தாழ்வு எண்ணமோ, தான் - அயலான் என்ற குறிப்போ காணப்படாது, பாரியே கபிலர் ; கபிலரே பாரி என்று சொல்லும் தோழமையுணர்வோடு கூடிய உருவத்தையே காண முடிகிறது. மகளிரைக் கொணர்ந்து மணமுடித்துக் கொடுத்தல் மரபன்றாயினும், புலவன் கொடுக்கக் கொள்வது குற்றமன்று என்றும், எவ்விதத் தீய எண்ணமுமில்லாமல் உள்ளன்போடு இவர்களை வாழ்க்கைப் படுத்தவே கொணர்ந்

தேன் என்றும், "அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே" என்ற அடியால் குறிப்பது மிக உருக்கந் தருவதாக வுள்ளது. ஒரு தந்தை தம் மக்களை மண முடிக்க எந்தெந்த இன்னல்களை அடைவாரோ, அந் தந்த இன்னல்களைப் பாரியின் நண்பராகிய கபிலர் அடைந்தாரென்பதே அவரது தோழமைக்குச் சான்ரு கும். அப் பெருமகன் தோழமைச் செல்வத்தினும் சிறந்தது வேறு இல்லை என்று கருதினர் போலும் !

## சோழனும் ஆந்தையும்

புறநானூற்றுள் பாரியும் கபிலரும் கொண்டிருந்த தோழமையினும் சிறந்ததாக எல்லா ஆசிரியர்களும் குறிப்பிடுவது கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தை யாரும் கொண்ட தோழமையாகும். அதற்குக் காரணம் ஒன்றுண்டு. ஆசிரியர் வள்ளுவர், 'நட்பு' என்ற அதிகாரத்துள் அமைத்துள்ள அருமைத் திருக் குறளில் நட்பிற்குரிய மூன்று வகைக் காரணங்களைக் குறிப்பிட்டுள்ளார். புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி என்பன. புணர்ச்சி என்பது, மொழியினடிப்படை யிலோ, நாட்டின் அடிப்படையிலோ மனம் ஒத்து விளங்குதல் என்று கொள்ளலாம். பழகுதல் என்பது, பல முறை சந்தித்து ஒருவரை யொருவர் அறிந்து உரையாடி மகிழ்ந்து உறவாடுதல் என்னலாம். உணர்ச்சி என்பது, இவ் விரண்டுமின்றிக் கேட்ட அளவானே உள்ளத்து நட்புணர்ச்சி கொள்ளுதலா கும். கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும் கேட்ட அளவானே நட்புக் கொண்டவர்கள். அந்த நட்பு உணர்ச்சி யொத்தலால் பிறந்ததாம். பாரிக்கும் கபிலருக்கும் பழகியமை காரணமாக ஏற்பட்ட நட்பு உரிமையாகும் உணர்ச்சியால் ஏற்படும் தோழமை மிகச் சிறந்தது எனினும், உலகியலில் மிகுதியாக நிகழ்வது பழகுதலால் வரும் தோழமையே யாம். தோழமைச் செல்வம் சிறந்தது எனக் கருதிய வேத்

தரும், புலவரும் தமிழகத்தில் வாழ்ந்தனர் என்பதைக் காட்டவே கோப்பெருஞ் சோழனையும் பிசிராந்தை யாரையும் எடுத்துக் காட்டினார் தமிழ்ப் பெரியார். சோழன் மக்களுடன் மனமாறுபட்டு வடக்கிருப்பதும், பாண்டிய நாட்டுப் புலவராம் ஆந்தையார் அவண் சென்று உடன் வடக்கிருந்து உயிர் நீப்பதும், அதனைக் கண்டோர் அனைவரும் வருத்தமும் வியப்பும் ஒருங்கே அடைவதும் படிப்போர் உள்ளத்தைத் தொடுவன. கோப்பெருஞ்சோழன், ‘பிசிராந்தையார் என் உயிர்த்தோழர் ; என்பால் செல்வம் மிக்கிருந்த இன்பக் காலத்தில் வாராமலிருப்பினும் யான் வடக் கிருந்து உயிர் போக்க விரும்பும் இவ் வல்லற் காலத் தில் வாராமல் இரார்" என்று கூறுவதும், பிசிராந்தை யாரிடம் உங்கள் பெயர் யாது என யாரேனும் வினு வினல், "என் பெயர் கோப்பெருஞ்சோழன் என்பார்; என்னையும் தன்னையும் வேருகக் கருதாத உரிமை யுணர்ச்சி யுடையவர். இங்கு வாரா திரார்" என்று கூறுவதும் மாசு மறுவில்லாத மனவளத்தைக் காட்டு கின்றன. பிசிராந்தையாரும் சோழன் நினைந்தவாறே போந்து வடக்கிருந்த தோழமை உணர்வை நேரிலே கண்ட பெருமக்கள்,

> "இசைமர பாக நட்புக் கந்தாக
> இனையதோர் காலை ஈங்கு வருதல்
> வருவன் என்ற கோனது பெருமையும்
> அதுபழு தின்றி வந்தவன் அறிவும்
> வியத்தொறும் வியத்தொறும் வியப்பிறந் தன்றே"

என வியப்புக் கடலிலே மூழ்கித் திளைப்பதைக் காண் கிறோம். முன் பின் காணுதும் பழகாதும் கேட்ட துணையானே உயிர் நீத்த தோழர் பிசிராந்தையாரைப்

போலல்லாது அரசவைப் புலவராய் நெடிது பழகிய நண்பர் பொத்தியார் மகன் பிறந்தபின் சோழனோடு வடக்கிருந்த செய்தியை அறிய முடிகிறது. பழகிய நட்பும், பழகாத நட்பும் ஆகிய இரு தன்மைக்கு ஒரே காலத்தில் சான்றுகள் அறியப்படுகின்றன. இருவரும் தோழமைச் செல்வமே ஏனைய செல்வங்களினும் உயர்ந்தது எனக் கருதி உயிர் துறந்தனர் என்பது உறுதியாகிறது. திருவள்ளுவரின்,

*" புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதாம்*
*நட்பாங் கிழமை தரும் "*

என்ற குறளுக்கு உரைவரைந்த பரிமேலழகர், "கோப் பெருஞ் சோழனுக்கும் பிசிராந்தையாருக்கும் போல உணர்ச்சி யொப்பின் அதுவே உடனுயிர் நீங்கும் உரிமைத்தாய நட்பினைப் பயக்கும் " என எடுத்துப் பாராட்டியது கருதற்குரியது. அன்றியும், தொல்காப பியத்து நூற்பாவின் உரையில், " இதற்குக் கோப் பெருஞ்சோழன் துறந்துழிப் பிசிராந்தையாரும் பொத்தியாரும் போல்வார் துறந்தார் என்று கூறும் புறச்செய்யுட்கள் உதாரணம்" எனக் காண்பதும் நினைத்தற்குரியது. ஊர், நாடு, குலம், பிறப்பு முதலியன கருதாத பொதுமையுள்ளம் அவர்களிடையே நிலவியதும் வேற்றுமையுணர்வு சிறிதும் காண வியலாததும் அப் பண்பின் பெருமைக்குச் சான்றாகும். வள்ளுவர் தோழமை யென்ற சொல்லால் கூறாதது போலவே பொத்தியாரும் கூறாது, " இசை மரபாக நட்புக் கந்தாக " என்று வாழ்க்கையின் வளமே தோழமை என்ற கருத்தை யமைத்திருப்பது அவர் புலமையை உணர்த்துகின்றது. புறநானூற்றில் பாரியும் கபிலரும், கோப்பெருஞ் சோழனும் பிசிராந்தையாரும் தோழமைக்கு இருப்பிடமாக விளங் கியவர்கள் என்பது அறியக் கிடக்கின்றது. எனினும்,

கபிலர் தோழன் என்ற பழந்தமிழ்ச் சொல்லை மறவாது பெருமிதத்தோடு கூறியிருப்பதால், அவரைத் தோழமைக்குத் தந்தை என்று அழைக்கலாம் அன்றோ ?

## சமய இலக்கியத்திலே

சங்க காலத்தில் அமைந்த வாழ்க்கை முறைக்கும், இடைக் காலத்தில் அமைந்த வாழ்க்கை முறைக்கும் மிக்க வேறுபாடு இருந்தது. சங்க கால மக்கள் ஈகையிலும் வீரத்திலும் கருத்துக்கொண் டிருந்தனர். ஆனால், இடைக்கால மக்கள் பக்தியிலும் சமய வுணர்ச்சியிலும் மிகுந்த ஆர்வங்கொண் டிருந்தார்கள். சிறப்பாக ஆறும் நூற்றாண்டு முதல் பதினாறும் நூற்றாண்டு வரையுள்ள இடைக் காலத்தில் சமய இலக்கியங்கள் மிகுதியாக வெளிப்பட்டன.

அறம், பொருள், இன்பம் என்ற மூன்றினும் வீடு பற்றிய ஆராய்ச்சியும், மதிப்பும் பெருகின. சைவசமய குரவர்கள் நால்வரும், நாயன்மார்களும், பட்டினத்தார், தாயுமானார் போன்றார்களும், பன்னிரு ஆழ்வார்களும் பிறரும் தத்தம் சமயத்தை வளர்ப்பதிலே முனைந்து நின்றனர். அவ்வப்பொழுது ஆண்ட அரசர்களும் தாம் சார்ந்து நின்ற சமயத்தினர்க்குப் பெருந்துணையாக விளங்கி வந்தனர். எனினும், அன்பு, அருள் என்ற இரண்டினையும் இணைக்கும் தோழமைச் செல்வத்தை மறந்தார்களிலர்.

## சேரமான் தோழர்

தேவார ஆசிரியர்களுள் ஒருவராகிய சுந்தரமூர்த்தி நாயனார் ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர்; இளமையிலே நரசிங்கமுனையர் என்ற சிற்றரசனால் விரும்பி வளர்க்கப்பட்டவர் ; திருமணக் காலத்தில்

இறைவனால் தடுத்தாட்கொள்ளப்பட்டவர்; தம்பிரான் **தோழர்** என்ற சிறப்புப் பெயர் பெற்றவர்; பரவையார், சங்கிலியார் என்ற இருவரையும் இறைவனருளால் மணந்துகொண்டு வாழ்ந்தவர்; **சேரமான் தோழர்** என்ற செந்தமிழ்ப் பெயரும் பூண்டவர்; தம் அரிய தவ வலிமையால் திருக்கைலாயத்தில் தொண்டுபுரியும் பேறு பெற்றவர். இவ் வருட் பெரியார் செய்த திருத் தொண்டத் தொகையை விரிந்த நூலாகச் செய்தவர் உத்தம சோழப் பல்லவன் என்ற பட்டம் பெற்றவர், அருண்மொழித் தேவராம் சேக்கிழாராவர். பெரிய புராணம் என்று வழங்கும் திருத்தொண்டர் புராணத் தில் வரும் சுந்தரமூர்த்தி நாயனாரின் வரலாற்றில் சுந்தரருக்கும் சிவபெருமானுக்கும் ஏற்பட்ட தோழமை யுணர்வை அழகுபடக் கூறியுள்ளமை காணலாம். சுந்தரர் பாடிய திருப்பதிகப் பாடலிலும் தோழமைத் தன்மை வியப்புடன் கூறப்பட்டுள்ளது.

## திருப்பதிகத்தில் தோழமை

சுந்தரர் திருவொற்றியூரில் சங்கிலியை மணந்து வாழ்ந்த காலத்தில் இளவேனிற் பருவம் தொடங் கியது. உடனே திருவாரூரில் வழக்கமாக நடை பெறும் வசந்த விழா நினைவிற்கு வந்தது. அப் பொழுதே திருவாரூர்ப் பெருமானாகிய புற்றிடங் கொண்டாரை வணங்க வேண்டும் என்று உள்ளமும் விரைந்தது. ‘வழுக்கி வீழினுந் திருப் பெயரல்லால் மற்று நான் அறியேன் மறு மாற்றம்’ என்ற உறைத்த உள்ளம் படைத்த சுந்தரர் மனமுருகிப் பாடிய திருப்பதிகப் பாடலில் இறைவன் தம்மைத் தோழமை யாகக் கொண்ட தன்மையைக் குறித்துள்ளார். அத் திருப்பாடலில் மூவாயிர மாண்டுகட்கு முன் தோன்றிய தோழன் என்ற பழந்தமிழ்ச் சொல்லை மறவாது போற்றியுள்ளமையைக் காணலாம்:

"ஏழிசையாய் இசைப்பயனாய்
இன்னமுதாய் **என்னுடைய**
**தோழனுமாய்** யான் செய்யும்
துரிசுகளுக் குடனாகி
மாழை ஒண்கண் பரவையைத்தந்
தாண்டானை மதியில்லா
ஏழையேன் பிரிந்திருக்கேன் என்
ஆரூர் இறைவனையே."

இந்த ஒரு பாடலே சுந்தரரின் ஆழ்ந்த அன்பிற்கும் பண்பிற்கும் போதிய எடுத்துக்காட்டாகும். அன்றியும் தம்மை ஆட்கொண்ட இறைவன் அருளிய தோழன் என்ற அமுத மொழியை நினைந்து நன்றி கூறுவதுபோ லமைந்துள்ளது. சுந்தரரை இறைவன் தோழன் என்று சொல்லுவதற்குரிய நிகழ்ச்சி அவர் வாழ்விலே மிகப் பொருந்தி விளங்குவதாகும். தோழமைச் செல்வத்தின் அருமையை நினைந்து சுந்தரர் அடைந்த பயன்கள் அளப்பரியன. அவர்தம் வரலாற்றால் இறைவன் தோழமையாகக் கொண்ட திறத்தைச் சேக்கிழார் கூற்றால் காண்போம்.

**சேக்கிழார் கண்ட தோழமை**

திருமுனைப்பாடி நாட்டை யாண்ட சிற்றரசன் நரசிங்கமுனையர் அன்போடு வளர்த்து வரும்போது பல்கலையும் கற்று மணப்பருவ மடைந்தார் சுந்தரர். அவர்தம் பெற்றோராகிய சடையனாரும், இசைஞானியாரும் புத்தூர் சடங்கவி சிவாச்சாரியாருடைய மகளைக் கேட்டு உறுதி செய்தனர். திருமணக் கோலத்தோடு சுந்தரர் வீற்றிருந்த அவையிடையே இறைவன் தடுத்தாட்கொள்வான் வேண்டி முதிய அந்தண வடிவுடன் தோன்றினார். நம்பி யாரூரனுக்கும் எனக்

கும் ஒரு வழக்குண்டு எனக் கூறி அடிமை யோலையைக் காட்டினார். ஆரூரர், அந்தணர் அந்தணர்க் கடிமை யாதலில்லை எனச் சினந்து கூறி ஓலையைக் கிழித்ததும், திருவெண்ணெய்நல்லூர்ச் சபையாரிடம் சென்று மூலவோலை காட்டி வென்றதும், அவையோர் ஆரூரன் அந்தணர்க்கு அடிமையாவதைத் தவிர வேறு வழியில்லை என்று தீர்ப்புக் கூறியதும், இறைவன் அனைவரும் பின்னே வர திருவருட்டுறை எனும் திருக்கோயிலுள் நுழைந்து மறைந்து விட்டதும், சென்ற அனைவரும் திகைத்து வியந்து நின்றதுமாகிய செய்திகள் இறைவன் தடுத்தாட் கொள்ள வந்த தன்மையை அறிவிப்பன. நம்பியாரூரர் தம்மை அடிமைகொண்டவர் கோயிலுள் மறைந்த தேனே என வருந்தி அழைத்தலும் இறைவன் காட்சி தந்து,'முன்பு நீ நமக்குத் தொண்டன்; நம் ஏவலாலே இம் மண்ணில் பிறந்தாய். உலக பாசம் பற்றாத வாறு நாமே வலிய வந்து தடுத்தாட் கொண்டோம். நம்மோடு வன்மை பேசி வன்றொண் டன் என்னும் பெயரைப் பெற்றாய். அர்ச்சனை பாட்டே யாகுமாதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக' என்றருளிச் செய்தார். இறை வன் ஆணையிட்டவாறு ஆரூரர் சொற்றமிழ் பாடும் திருத்தொண்டை மேற்கொண்டு திருப்பதிகங்கள் பாடினார். அப் பாடல்களே இன்று ஏழாந் திருமுறையாக அமைந்துள்ளன. சுந்தரர் வாழ்ந்த காலமோ மிகக் குறைவு எனினும், முப்பத்தெண்ணா யிரம் பதிகங்கள் பாடியதாக அறியக்கிடக்கின்றது. பதினெட்டாண்டுகளே வாழ்ந்த சுந்தரர் இத் துணைப் பாடல்களை இயற்றி இறைவனுக்குத் தொண்டு புரிந்தமை வியப்பிற்குரியதே. பாடல் தொண்டு செய்வதன் பொருட்டுப் பல தலங்களை வணங்கச் சென்றவர் தில்லை மன்றாடும் பெருமானை வழிபட்டுப் பேரானந்தவாரிதியில் திளைத்து நின்றனர். திருவருள்

திருவாரூருக்கு வருமாறு குறிப்பிக்க, சுந்தரர் திருவாரூர்க்குச் சென்றணைந்தார். தியாசேகர் திருவாரூர் வாழ்வாரை வரவேற்றுச் சிறப்பிக்க ஆணையிட்டார். அம்மொழி கேட்டாரனைவரும் வன்றொண்டரை வரவேற்றுத் திருவீதி வலம் செய்து திருக்கோயில் எய்தினர். இறைவனை வணங்கி அன்போடுருகி அகங்குழைந்து திருப்பதிகம் பாடியபொழுது ஆரூர்ப் பெருமான் திருவருளால் "**நாம் உனக்குத் தோழர் ஆனோம்.** உன்னைத் தடுத்தாண்டு கொண்ட காலத்து நீ தாங்கியிருந்த மணக் கோலத்தை என்றும் தாங்கி வேட்கை தீர இவ் வுலகில் விளையாடுவாயாக" என்ற வாக்கு வானிலே எழுந்து பரவியது. அன்று முதல் அடியவர்கள் யாவரும் தம்பிரான் தோழர் என்றே அழைத்து மகிழ்வாராயினர். அடிமையாகக் கொண்ட பெம்மான் தோழனைக் கொண்டாரே என எண்ணி மகிழ்ந்தார் சுந்தரர். இந்த நிகழ்ச்சியைச் சேக்கிழார் அறிவிக்கின்றபோதும் தோழமைப் பண்பை மறவாது பாடியிருத்தல் காணலாம். இறைவன் சுந்தரரைத் தடுத்தாட் கொண்ட பகுதியில்,

> "வாழிய மாறைப்புற்றிடங் கொண்
> மன்னவ னாருளாலோர் வாக்குத்
> தோழமை யாக வுனக்கு நம்மைத்
> தந்தன நாமுன்பு தொண்டு கொண்ட
> வேள்வி யிலன்றுநீ கொண்ட
> கோலமென்றும் புனைந்து நின் வேட்கைதீர
> வாழி மண் மேல் விளை யாடுவாயென்
> றாரூரர் கேட்க எழுந்த தன்றே"

என்ற பாடல் மிகவும் சிந்தித்தற்குரிய தாகும். தோழமையாக நம்மைத் தந்தனம் என இறைவன் கூறியதாகக் கற்பித்ததும், அதனையே குறியாகக் கொண்டு சுந்தரர் மறவாது "என்னுடைய தோழனு

மாய் யான் செய்யும் துரிசுகளுக் குடனாகி மாழை யொண்கண் பரவையைத் தந்தாண்டானை" என்று நினைந்துருகி யிருப்பதும் தோழமைச் செல்வத்தின் மேன்மையை உணர்த்துகின்றன. ஈண்டுத் தோழமை என்று இறைவன் கூறியதாகக் கற்பித்திருப்பது அதன் உயர்வையும் இன்றியமையாமையையும் புலப் படுத்துகின்றது. இளமைத் தன்மையுடைய நம்பி யாரூரரைத் தோழனாகக் கொண்டான் என்பது மட்டு மன்று; நம்பியாரூரருக்குப் பரவையையும் சங்கிலியை யும் மணமுடிக்கத் துணை நின்றதும், பரவையார்பால் சுந்தரர் பொருட்டுத் தூது சென்றதும், இழந்த கண்களை மீட்டுத் தந்ததும், கலிக்காமரால் உண்டாய பகையைத் தீர்த்ததும்,ஏனைய அடுக்கிவந்த இடுக்கண் களையெல்லாம் தோழனாகக் கொண்ட பெருமை நோக்கித் தீர்த்ததையும் காண்கின்றோம். சேக்கிழார் தோழன் என்பவன் யார் என்பதைக் காட்டுவார் போல் இறைவன் சுந்தரருக்கு வாழ்க்கை முழுவதும் துணைநின்றருளியதைக் காட்டுகின்றார். இறைவனை ஒரு பெண்ணின் பொருட்டுத் தூது போக்கினான் என்பதால் ஏற்பட்ட பழி சுந்தரருக்கு மட்டுமன்று; அவர்தம் தோழராகிய இறைவனுக்குமுரியதே; எனி னும், உண்மைத் தோழராயினார்க்குத் தம் தோழ ரொருவர் ஒரு தீங்கு செய்கின்ற நாளே பயன்பட்ட நாளாம். அம் முறையை மேற்கொண்டே இறைவ னும் தன் தோழராம் சுந்தரர்க்குப் பழிச்சொல்லும் பகையுமுண்டாகாதவாறு கலிக்காமர்பால் சென்று உண்மையறியச் செய்தான் என அறிகின்றோம். தோழமை கொண்ட இறைவனைப்போல் சுந்தரரும் பிறர்பால் தோழமை கொள்ள நேர்ந்தது. இறைவ னுடைய நிலைக்கும் அடியவர் நிலைக்கும் மிக்க வேறுபாடுளதாயினும் தம் நிலையில் தாழ்ந்து கிடப் போரை உயர்த்தி ஒத்த தோழராகக் கொண்டது ஒருவகைத் தோழமை. இறைவழிபாடு செய்யும்

அன்பர்கள் பிறரை யெல்லாம் தங்கள் தோழர்களாகக் கருதி உயர்த்துதலும் மதித்தலும் வேண்டும் என்பதை வலியுறுத்தவே இறைவன் ஆரூரரைத் தோழராகக் கொண்டு அருள் புரிந்தான். இறைவன்பால் இளமையிலேயே அன்பு கொண்டு தோழமைச் செல்வம் பெற்று அருளுக்கு உரியவராயினர். சுந்தரர் வாழ்க்கையே இம் மூவகைச் செல்வத்திற்கும் உரிய தொடர்பை விளக்காநிற்கின்றது. அஃதன்றியும், சுந்தரர் சேரமான் தோழர் என்று அழைக்கப்பட்ட வரலாறும் நினைத்தற்குரியதாம். தம்பிரான் தோழர், சேரமான் தோழர் என்ற சொற்றொடர்கள் ஆழ்ந்து சிந்திக்கத் தக்கன. இறைவன், அரசன் ஆகிய இருவரும் அடியவராகிய சுந்தரரைத் தோழராகக் கொண்டதும், அவ்விருவரையும் இவர் தோழர்களாக எண்ணிப் போற்றியதும் காணலாம்.

*" முன்பு பணிந்த பெருமானைத் தாமும்*
*பணிந்து முகந்தெடுத்தே*
*அன்பு பெருசத் தழுவவிரைந் தவரு*
*மார்வத் தொடு தழுவ*
*இன்ப வெள்ளத் திடைநீந்தி யேற*
*மாட்டா தலைவார் போல்*
*என்பு முருக வுயிரொன்றி யுடம்பு*
*மொன்று மெனவிசைந்தார். "*

*" ஆன நிலைமை கண்டதிருத்தொண்ட*
*ரளவின் மகிழ்வெய்த*
*மானச் சேரர் பெருமாளுர் தாமும்*
*வன்றொண் டருங்கலந்த*
**பான்மை நண்பாற் சேரமான்தோழர்**
*என்று பார்பரவு*
*மேன்மை நாம முனைப்பாடி வேந்தர்க்*
*காகி விளங்கியதால். "*

*" ஒருவ ரொருவ ரிற்கலந்த வுணர்வால்*
*இன்ப மொழியுரைத்து*
*மருவ வினியார் பாற்செய்வ தென்னும்*
*என்று மகிழ்ச்சியினுற் கொண்டு*
*பருவ மழைச்செங் கைப்பற்றிப்*
*பரமர் தாள்பணியத்*
*தெருவு நீங்கிக் கோயிலினுட் புகுந்தார்*
**சேர மான்தோழர்."**

சேரமான் பெருமாள் நாயனுர் திருவஞ்சைக் களத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தவர்; அளவிலாத சிவப்பற்றுடையவர்; பாணபத்திரர் பொருட்டு மதுரைச் சோமசுந்தரர் திருமுகப் பாசுரம் அருளப் பெற்ற பெருமை சான்றவர்; சுந்தரரின் அன்பின் திறத்தை இறைவன் வாயிலாக அறிந்து நட்புக் கொண்டவர். அன்புமுற்றித் தோழமை கனிந்து நின்ற காட்சியைக் குறிப்பிட வந்த சேக்கிழார், மூன்று பாக்களால் மிக உருக்கமாகக் கூறியுள்ளார். சேரமான் பெருமாள் திருவாரூரை வந்தடைந்தார். நம்பியாரூரர் எதிர்சென்று கண்டார். உடனே அவர் திருவடியின்கண் பெருமானுர் வீழ்ந்து வணங்க, ஆரூரரும் வணங்கி அன்போடு தழுவி மார்புற அணைத்து உயிரும் உடம்பும் ஒன்றினுற்போல இன்ப வெள்ளத்தில் மூழ்கியிருந்தனர். அக் காட்சி கண்ட உலகவர் சேரமான் தோழர் எனப் போற்றினர். தழுவிய இருவரும் உணர்வால் உரையாடி, பரமர்தாள் பணியக் கோயிலுள் புகுந்தனர்; உண்மைத்தோழமை யுடையார் எதிர்ந்த ஞான்றே பொருந்துவர்; உண்மைத் தோழமையில்லார் தொல்பெருங் கால மெல்லாம் பழகினும் பொருந்தமாட்டார் என்ற கருத்தினை மனங்கொள அமைத்தமை யுணர்வாம்!

## சேரரும் ஆரூரரும்

சேரமான் பெருமாளும் சுந்தரரும் நட்புரிமை கொண்டொழுகிப் பல தலங்களுக்கும் சென்று வணங்கி வந்தனர். மதுரையில் மூவேந்தரால் வரவேற்றுப் போற்றும் சிறப்பெய்தித் தத்தம் ஊர் திரும்பினர். ஒரு முறை சேரர் பெருமான் திருவஞ்சைக் களத்திற்கு எழுந்தருளினர். நம்பியாரூரர் செய்த அற்புத நிகழ்ச்சிகளைக் கேட்ட சேரமானர் தம்மை மறந்து திருவடி தொழுது தழுவிக்கொண்டு அளவில்லாத சிறப்புச் செய்தார்; நட்புரிமை காரணத்தால் ஆரூரரும் மறுக்கவியலாமல் வாளாவிருந்தனர். திருவஞ்சைக்களத்தில் தம் தோழரோடு இன்புற வாழ்ந்து வரும் நாளில் அங்குள்ள திருக்கோயில் சென்று, "இறைவனே! அடியேனை இவ்வுலக வாழ்க்கையினின்றும் கரையேற்றி யருள வேண்டும்" என்று திருப்பதிகம் பாடினர். இறைவன் கேட்டு மனமிரங்கி வெள்ளை யானையைக் கொண்டு நம்பியாரூரரை அழைத்துவருமாறு தேவர்கட்குப் பணிக்க, அவர்கள் திருவஞ்சைக்களம் போந்து வழிபாடு செய்து வந்துகொண்டிருந்த ஆரூரரை ஏற்றிக்கொண்டு சென்றனர். ஆரூரரோ தம் உயிர்த் தோழராம் சேரமான் பெருமானை மறவாது உள்ளத்தில் நினைத்துக்கொண்டே சென்றனர். இதனையறிந்த அரசர் தாம் ஏறிய குதிரையின் காதிலே ஐந்தெழுத்து மந்திரத்தை ஓதி வான் வழியாகப் பாய்ந்து வன்றொண்டரின் யானையைக் குறுகி வலம் செய்து சென்றனர். இருவரும் திருக்கைலாய மடைந்து பல வாயில்களைக் கடந்தனர். திருவணுக்கன் திருவாயிலிலே சேரமான் தடைப்பட்டு நிற்க, சுந்தரர் தடைப்படாது இறைவனைச் சென்றடைந்தார். தம் தோழமை யுணர்ச்சியால் உந்தப்பட்ட சுந்தரர் சேரமான் பெருமானைத் திருவணுக்கன் வாயிலில் தடைப்

படுத்தியதைத் தெரிந்தார். தம்மையும் சேரமான் பெருமாளையும் வேறுபாடாக எண்ணுமல் அவருக்கு உதவும் வாய்ப்புக் கிடைத்தமையைப் பயன்படுத்தினுர். உடுக்கை இழந்தவன் கை விரைந்து பற்றிக் காப்பாற்றும் தன்மைபோல் உற்றவிடத்து உதவித் தம் தோழமையைப் பாதுகாத்தார். சேரமான் தோழர் என்பதைக் கடைசிவரையிலும் நிலைநிறுத்திய சுந்தரர் நம் அனைவருக்கும் சிறந்த வழிகாட்டியாவார் என்பதைக் கூறவும் வேண்டுமோ ?

தம்பிரான் தோழர் இறைவன் ஆணைப்படி தமிழில் திருப்பதிகங்கள் பாடித் தொண்டாற்றினுர். அவருக்கு முன் தோன்றிய சைவ சமய குரவர்களாகிய திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் தமிழ்ப் பதிகங்கள் பாடித் தொண்டு செய்தனர். அருள் பெற்ற நம்பியாண்டார் நம்பிகள் சிதம்பரத்தில் கண்டு சோழ மன்னனுக்கு அறிவித்தார். அவற்றைத் தேடிக் கண்டபொழுது, திருஞான சம்பந்தர் பாடிய பதிகங்கள் பதினுயிரம் என்றும், திருநாவுக்கரசர் பாடியவை நாற்பத்தொன் பதினுயிரம் என்றும் உணர முடிந்தது. சிதம்பரத்தில் பொன் மன்றத்தருகே மூவர் திருக்கர முத்திரைகளோடு தேவார ஏடுகள் இருந்தன என்று கூறுவர் சமயச் சான்ருேர்.

## வள்ளலார் ஆண்ட தோழமை

இம் மூவருடைய தேவாரப் பாடல்களையும் மணிவாசகரின் திருவாசகத்தையும் உள்ளம் ஈடுபட்டு உருகிப் பயின்றவர்களுள் ஒருவர்தாம் அருட்பிரகாச வள்ளலார் என்றழைக்கப்படும் இராமலிங்கஅடிகளார். அவர் பத்தொன்பதாம் நூற்ருண்டிலே வாழ்ந்தவர். சுந்தரமூர்த்தி நாயனுர் காலத்திற்கும் இவர் தோன்றிய காலத்திற்கும் இடையே ஆயிரமாண்டுகள்

கடந்துவிட்டன. நால்வர் பாடல்களையும் நன்கு பயின்று பாயிரம் வழங்குதல் போலத் தாம் அருளிய அருட்பா நூலுள் ஆளுடைய பிள்ளையார் அருண்மாலை, ஆளுடைய வரசு அருண்மாலை, ஆளுடைய நம்பிகள் அருண்மாலை, ஆளுடையவடிகள் அருண்மாலை என நான்கு பகுதிகள் அமைத்துப் பாடியுள்ளார். நால்வரது அருட் புலமையை வெளிப் படுத்துவான் வேண்டியும் பாடியதாகக் கருத இட முளது.

சுந்தரரைப்பற்றிப் பாடிய பகுதியுள் ஒரு பாடலை ஈண்டு எடுத்துக்காட்டுதல் இன்றியமையாததாகும். தேவாரப்பாக்களில் சுந்தரமூர்த்தி நாயனுர் பாடியவை முப்பத்தெண்ணுயிரம் பாடல்கள் என முன்னரே குறித்தோம். அத்துணைப் பாக்களில் இராமலிங்கர் உள்ளத்தை மிகவும் ஈடுபடுத்தியது ஒரு திருப்பாடல். அதுவே முன்னர்க் குறித்த "ஏழிசையாய் இசைப் பயனுய் இன்னமுதாய் என்னுடைய தோழனுமாய்" என்று தொடங்கும் பாடல். இப் பாடலில் இறை வன் தோழமையாகக் கொண்ட சிறப்பையும், தாம் செய்த பிழைகளையெல்லாம் பொறுத்து உடனிருந் தருள் செய்த பெருந்தகைமையினையும் பாராட்டியுள் ளார். இதனை ஆயிரமாண்டுகட்குப்பின் வந்த அடிக ளார் நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து ஊற்றெழும் கண்ணீரால் உடம்பு நனைந்து நனைந்து இன்பக் கடலில் திளைத் துள்ளமையும், மூவாயிரமாண்டுகட்கு முன் எழுந்த தோழன் என்ற சொல்லை மறவாது போற்றியமையும் காண உள்ளம் மகிழ்வால் பொங்குகின்றது. அவ் வருமைப் பாட்டினை என்றும் உள்ளத்தே பதித்துத் தோழமைச் செல்வத்தைத் துய்த்து மகிழ்வோம்.

" ஏழிசையாய் இசைப்பயனாய்
இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் என்று முன்னீ
சொன்ன பெருஞ் சொற்பொருளை
ஆழ நினைந்திடில் அடியேன்
அருங்கரணம் கரைந்து கரைந்து
ஊழியில் இன்புறுவது காண்
உயர் கருணைப் பெருந்தகையே.''

தோழன் என்று இறைவன் கூறிய வார்த்தையின் உயர்ந்த பொருளை ஆழ்ந்து நினைக்குங்கால் அகமும் புறமும் உருகிக் கரைந்து ஊழிக் காலத்து இன்பத்தோடு ஒன்றாகிப் பிரிவின்றிக் கலக்கின்றது என்று வியக்கின்றார்! உயர்ந்த நிலையிலே உள்ள இறைவன் என்னைத் தோழனாகக் கொண்டானே என வியக்கும் சுந்தரரை நினைக்குங்கால் அடிகளார் வியவாமலிருப்பரோ? அந்தச் சொல்லிலே எத்துணை ஆற்றல் மிளிர்கின்றது? வேற்றுமையுள் ஒற்றுமை காட்டி உலகை உய்விக்கும் சொல் தோழமையே யன்றோ?

### கம்பர் காப்பியத்திலே

சுந்தரர் தோழமை என்ற சொல்லை மறவாது போற்றியதைப் போன்றே, கவியரசராகிய கம்பர் தோழமை என்ற சொல்லையும் பொருளையும் தம் காப்பியத்தில் பல்லிடங்களிலும் பாராட்டி அமைத்திருப்பதும் ஈண்டு ஆராயத் தக்கதாம். பன்னிரண்டாம் நூற்றாண்டிலே வாழ்ந்த கம்பர் தொன்மையதாகிய தோழமை என்ற சொல்லை மறவாமல் அமைத்து விளக்கியிருப்பது இராமன் குகனுடன் நட்புரிமை கொள்ளும் காலத்திலாகும். அந்தச் சொல்லைப்

பெருமைப் படுத்தவே அயோத்தியா காண்டம் முதல் யுத்த காண்டம் வரை நினைவுறுத்திச் சென்றார் போலும்!

### என்னுயிர் அனையாய் நீ

இராமன், இலக்குவன், சீதை ஆகிய மூவரும் அயோத்தி நகர் நீங்கி நள்ளிரவில் கோசல நாட்டைக் கடந்து கங்கைக்கரை யடைந்தனர். அங்குத் தவ வொழுக்கத்தை மேற்கொண்ட முனிவர்கள் மகிழ்ந்து வரவேற்று விருந்தூட்டித் தங்க இடமளித்தனர். இராமன் தவச்சாலையில் தங்கியிருப்பதை அக் கங்கைக் கரையிலுள்ள சிருங்கிபேர நாட்டின் அரசனாகிய குகன் கேள்வியுற்றுத் தன் சேனையுடன் காண வந் தனன். இலக்குவன் அக் குகனை அறிமுகப்படுத்த இராமன்பால் சென்று காணிக்கை தந்து வணங்கி நின்றனன். தேனும் ஊனும் படைத்த வேட்டுவக் குகனின் கள்ளமில்லா அன்பிற்கு உள்ளம் நெகிழ்ந் தனன்! குகன் இராமன்பால் இரவு முழுதும் தங்கி யிருந்து இராமனைத் தன் நகர்க்கு வந்தருள வேண்டி னன். புண்ணிய நதியாடிப் புனிதரை வழிபட்டுத் திரும்புங்கால் வருவோம் என்று சொல்லவும், குகன் இசைந்து கங்கையைக் கடக்க நாவாய் கொணர்ந் தனன். இராமன் முதலிய மூவரும் நாவாய் ஏறிச் சென்று கரை எய்தினர். சித்திரகூடம் செல்லவிரும் பிய இராமன் குகன்பால், அவ்வூர் எங்குளதென வினவினன். அதனைக் கேட்ட குகன், 'நான் ஒரு நொடிப்பொழுதும் உம்மைவிட்டுப் பிரிந்திருக்கப் பொறேன்; சேனையுடன் உம்பால் தங்கிப் பிறரால்தீங்கு வாராமற் பாதுகாப்பேன். ஒருகால் பகைஞர் என்னினும் வலிவிஞ்சியவராய் என்னையும் அடக்கி உமக்குத் தீங்கு செய்ய நெருங்குவராயின், என் உயிர் போகும் வரை யில் அவரை எதிர்த்து நிற்பேனே யொழிய, அப்

பகைஞர் கையில் காட்டிக்கொடுத்து வசைக்கு உள்ளாகி வாழமாட்டேன்' என்று கூறினன். அம்பி நாயகன் உரைத்த அன்பு மொழிகளைக்கேட்ட இராமன் மனமிளகித் தன் தோழமையைப் புலப்படுத்தினன். அவ்வாறு புலப்படுத்துங்கால் இழிகுலத்தவனென்று கருதாது உயிர்த்தோழன் என்று வாய்விட்டுரைத்ததாகக் கம்பர் பாடியுள்ளமையைக் கங்கைப் படலத்தில் காணலாம். குகன் உரைத்த வார்த்தைகளைக் கேட்டு இராமன் தோழமை பாராட்டுதலை,

“ அன்னவ னுரை கேளா அமலனும்
உரை நேர்வான்
என்னுயிரனை யாய்நீ
யிளவலு னிளையானிந்
நன்னுதல வனின்கே ளளிர்
கடனில மெல்லாம்
உன்னுடையது நானுன்
தொழிலுரி மையினுள்ளேன் ”

என்று காட்டியுள்ளார் கம்பர். குகனை வேட்டுவர் தலைவன் என்பதும், இழிகுலத்தவன் என்பதும் தெரிந்தும், “நீ என்னுயிரை யொத்தவன்; என் தம்பி உன் தம்பி; இச் சீதை உன் தோழி; இந் நிலவுலக மெல்லாம் உனது சொத்து; யான் உன் ஏவல் தொழிலிற்குக் காத்து நிற்கும் உரிமையுடையேன்” என இராமன் கூறுவது குகன்பால் கொண்ட தோழமைப் பண்பை உணர்த்துகின்றது. அம்மட்டோ! ‘நாங்கள் தயரதர்க்கு நால்வர் புதல்வரிருந்தோம்; இப்பொழுது ஐவரானோம். உன் சுற்றம் என் சுற்றமே. ஆதலால், சிருங்கிபேர நாட்டவரைக் காப்பாயாக. அயோத்திக்கு மீண்டு செல்லுங்கால் இங்கு வருவோம். கோசல நாட்டைக் காப்பதற்குப் பரதனை வைத்தது போல்,

இங்குள்ளாரைக் காப்பதற்கு உன்னை வைத்திருக்கின்றோம். என் கிளைஞரான இவரைப் பாதுகாப்பாயாக' எனத் தொடர்ந்து இராமன் கூறுவது தோழமையின் ஆழத்தைக் காட்டுகின்றது. கம்பர் தோழமைச் செல்வத்தைத் தம் காப்பியத்தில் அமைப்பதற்கென்றே இவ்வாறு அமைத்தார் போலும! காட்டில் வாழும் வேட்டுவனாகிய குகனுக்குத் தன்னைத் தோழன் என்று சொல்லியதோடன்றி, இலக்குவனை உடன் பிறந்தானாகவும், சீதையைத் தோழியாகவும் அறிமுகப்படுத்தும் வாயிலாக உறவாக்கியதும் நினைந்து மகிழத் தக்கதாம்.

இராமன் கிராதர் வேந்தனைத் தோழனாகக்கொண்டதைக் கூறிய கம்பர், அத் தோழமையைக் குகன் மறவாது போற்றினான் என்பதைக் குகப்படலத்துள் காட்டியுள்ளார்.

## குகன் கூற்றில் தோழமை

இராமன் கானகம் அடைந்தமை கேட்டு வருந்திய பரதன் மீட்டுச் செல்வதற்காகத் தன் படைகளுடன் கோசல நாட்டைக் கடந்து கங்கைக் கரையை அடைந்தான். புளினர்கோன் சேனை வருதலைக் கண்டு சினம் பொங்கிப் போர்க்கோலம் பூண்டு, 'எலியெலாம் இப் படை, அரவம் யான்!' என முழங்கித் தன் படையை ஒருங்கு வந்து கூடுமாறு அழைத்தனன். தென்கரையில் நின்ற படை வீரரை நோக்கிக் கட்டளைகள் பல இட்டனன். மேலும், தன்னினத்தவரிடமும் இராமனைக் காக்கும் கடமையைத் தெரிவிக்கின்றான். அவ்வாறு கூறும்போது இராமன் தன்பால் கொண்ட நட்புரிமையை நினைந்து போற்றுதலை,

"ஆழ நெடுந்திரை யாறு கடந்திவர் போவாரோ?
வேழ நெடும்படை கண்டு விலங்கிடும் வில்லாளோ?
**தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ?**
*ஏழமை வேட னிறந்திலன் என்றெனை யேசாரோ?"*

என்ற பாடலில் காட்டும் அருமை பாராட்டுதற்குரிய தாம். பரதன் வடகரையில் தன் படையுடன் போந்த தைக் கண்ட குகன் தவறுபடக் கருதி, இராமனை வஞ் சித்து அரசினைக் கவர்ந்துகொண்டவர்கள் நாட்டை விட்டோட்டியதுமன்றிக் காட்டிலும் வாழவிடாது தீங் கிழைக்க வந்துள்ளனரே என்று சினத்தால் பொங்கு கிருன். "வேடர் விடும் சரம் மன்னர்மேல் பாயாது போய்விடுமோ? இப் பேரியாற்றை எனது உதவியில் லாமல் கடந்து இவர்கள் போய்விடுவாரோ! இவர்கள் யானைப் படை கண்டு அஞ்சி ஒளியும் வில்லாளனே? 'தோழமை' என்று சொல்லிய அந்த உயர்ந்த ஒப் பில்லாத சொல் என்றும் பாதுகாத்து மதிக்கத்தக்க சொல்லன்றே? என்னையும் ஒரு பொருட்டாக மதித் துத் தோழமை கொண்ட தயரதன் மைந்தனுக்கு எவ் விதத் துன்பமும் ஏற்படாதவாறு உயிருள்ளளவும் காப் பேன். அவ்வாறு செய்யும் கடமையில் தவறினே ஞயின், இவ் வேழை வேடன் மானங்கெட வாழ்தலி லும் இறந்திருக்கலாகாதா என்று உலகத்தவர் என் னைப் பழிக்கமாட்டாரோ?' எனப் பலவாறு கூறி, 'என் ஆருயிர்த் தோழமை தந்தாளுகிய இராமன் மீது பரதன் படை செல்வது எனது படையினையும், எனது அரிய உயிரையுங்கொண்டபின் னன்றோ? தோழமை யைக் காவாது யான் ஒழிவேனல்லேன்' என்று தன் தோழமையைப் புலப்படுத்துகின்ருன். அவன் கூறும் வாயிலாக அமைந்த, 'தோழமை என்றவர் சொல்லிய சொல் ஒரு சொல்லன்றே?' என்பது நினைந்து நினைந்து உள்ளம் மகிழ வேண்டியதாகும். கம்பரின்

நினைவு சொல்லில் மட்டுமின்றிப் பொருளிலும் ஆழ்ந்து நின்றதென்பதற்கு இது சிறந்த சான்றாகும்.

## சீதை எண்ணத்தில் தோழமை

தோழமை என்ற ஒப்பற்ற சொல்லை அவ்வள வோடு நிறுத்திவிட விரும்பாத கம்பர் சுந்தர காண்டம் காட்சிப் படலத்திலும் பொருத்தமான இடத்தில் அமைத்து நினைவூட்டுவது சிந்திக்கத்தக்கதாம். இலங்கை வேந்தன் சீதையை அசோக வனத்தில் அரக்கிய மகளிர் நடுவில் சிறைப்படுத்தி வைத்துள் ளான். அனுமான் சீதையைத்தேடிக் காணும்பொருட்டு இலங்கை வந்து சேர்ந்தனன். அரண்மனை முதலிய இடங்களிலெல்லாம் தேடிக்காணுது வருந்தி இறுதி யில் அசோக வனத்தை வந்தடைந்தனன். அனுமான் சீதையைக் கண்டு மகிழ்ந்து கூத்தாடினன். சீதையோ இராமனது பிரிவுத்துன்பம் பொறுக்க வியலாமல் புலம்பி வாட்டமுற்று ஓவியம் புகை யுண்டது போன்று உருவழிந்திருந்தாள். இராமனையே எண்ணி வருந்திய சீதை, இராமன் தன்னை மீட்க வராததற்குப் பல கார ணங்களையும் நினைத்து ஆறுதலடைய வியலாதவளாய் அவனுடைய குணநலங்கள் ஒவ்வொன்றையும் மனக் கண்முன் கொணர்ந்து தன்னை மீட்க வாராம லிரான் என்று உள்ளம் உறுதி கொண்டாள். சீதை இராமனுடைய பல்வேறு குணங்களை நினையுங் கால் அவனுடைய தோழமைப் பண்பையும் நினைத்த தாக,

> *"ஆழ நீர்க்கங்கை அம்பி கடாவிய*
> *ஏழை வேடனுக்கு எம்பிநின் தம்பிநீ*
> ***தோழன்** மங்கை கொழுந்தி யெனச்சொன்ன*
> *வாழி நண்பினை யுன்னி மயங்குவாள்"*

எனக் கவியரசர் அழகுபெற யாத்துள்ளார். கங்கைக் கரையிடத்து இராமன் குகன்பால் சொன்ன உரைகளை நேரில் கேட்டு நின்ற சீதை, அவ் வுரைகளைச் சிறிதும் மறவாது மனத்திற் பதித்து அன்பு வடிவாகிய குகனை யும், அருள் வடிவாகிய இராமனையும் ஒருங்கு இணைத்த தோழமைப் பண்பை நினைந்து மயங்குவது மிகப் பொருத்தமாகும். கம்பர் தம் புலமைத் திறத்தால், சீதையும் இழிகுலத்தவனை குகனைச் சமமாக மதிக் கின்ருள் என்பதைக் காட்டுதல் இன்புறுவதற்குரிய தாம். அன்றியும், இராமன் சொல்லுங்கால் சீதை யைத் தோழி என்று கூறியதாக அமைத்துள்ளமை யும் ஆய்வார்க்கு அகமகிழத் தக்கதாம்.

## இராமன் மறவாத் தோழமை

இந்தப் பண்பினை இறுதியாக முடித்துக் காட்டு வார் போல யுத்த காண்டத்திலுள்ள விபீடணன் அடைக்கலக் காதையுள் இராமனே தன் கூற்ருகத் தோழமையைப் புலப்படுத்துவதாக அமைத்துள்ளார்.

இராமன் வானவீரர்கள் அமைத்த பாடிவீட்டில் தங்கி யிருந்தபோது, இராவணனின் இளவல் துணை வர்களுடன் வாயிலடைந்தனன். அடைக்கலம் புக வந்த செய்தியை அறிந்த இராமன் முதலியோர் ஏற் கலாமா, ஏற்கக்கூடாதா என்ற ஆராய்ச்சி நிகழ்த் தினர். சுக்கிரீவன் முதலிய அனைவரும் வீடணனை ஏற்றல் தீமை பயப்பதாகும் எனக் கூற, அனுமன் அவனை ஏற்கலாம் என்பதற்குரிய காரணங்களை எடுத் துரைத்தான். இராமனும் அனுமன் கூற்றையே தழுவி, அடைக்கலத்தின் பெருமையை விளக்கி, வீட ணனை ஏற்பதே தக்கது என்று கூறினன். சுக்கிரீவன் முதலியோரும் இசைந்தனர். சுக்கிரீவன் வீடணனை அழைத்துவரச் சென்றபோது அடைக்கல மீந்தான்

என்பதை அறிந்த வீடணன் முன் செல்லவும் ஒருவரை ஒருவர் எல்லியும் பகலும்போலத் தழுவிக்கொண்டனர். ஈண்டும் முன் பகைமை பாராட்டிய இருவரும் உள்ளந் தூயராய் எதிர்ப்பட்டவுடன் தழுவிக்காட்டிய தோழமையைக் குறிப்பால் அறிய முடிகின்றது. சுக்கிரீவனால் அழைத்துச் செல்லப்பட்ட வீடணன் இராமன் தனக்குப் பகைவனெனத் தெரிந்தும் அடைக்கல மீந்தனனே என உருகிய உள்ளத்தனாய் மண்ணில் வீழ்ந்து வணங்கினன். இராமன் அவனுக்கு இருக்கை தந்து, இலங்கைச் செல்வம் நின்னதே தந்தேன் எனக் கூறி முடிசூட்டப் பணித்தான். அதனைக்கேட்ட வீடணன் பன்முறை வணங்கி, யான் உய்ந்தேன் என மகிழ்ந்து, நும் இளவலாகிய பரதனுக்குக் கவித்த முடியை எனக்கும் சூட்டி அருள்க எனப் பணிந்தனன். அப்பொழுது இராமன் வீடணனிடத்தில் தன் தோழமையைப் புலப்படுத்துதலை,

> "குகனொடு மைவரானேம் முன்பு; பின் குன்று சூழ்வான்
> மகனொடு மறுவரானேம் எம்முழை யன்பின் வந்த
> அகனமர் காதலைய! நின்னொடும் எழுவரானேம்;
> புகலருங் கானந்தந்து புதல்வராற் பொலிந்தான் நுந்தை"*

எனக் கம்பர் பாடியுள்ளது கருதுதற்குரிய தாகும். இராமன் காட்டிற்குச் சென்ற பிறகு தோழர்களாகக் கொண்டவர் மூவர்: காட்டிலே ஒருவர்; மலையிடத்திலே ஒருவர்; கடற்கரையிலே ஒருவர். கிராதர் வேந்தன் குகனும், வானர வேந்தன் சுக்கிரீவனும், அரக்கர்கோன் வீடணனும் ஆகிய மூவரேயாம். அம் மூவரும் அரசர்களாயினும் மூவரையும் பழகியறியாமலும், இழிகுலத்தவனென்றும், குரங்கினத்தவ னென்றும், பகையினத்தவனென்றும் அறிந்தும் அனைவரையும் ஒரு தன்மைத்தாகக் கருதி நட்புக்கொண்டதோ டல்

*கம்ப ராமாயணம், 1025.

லாமல் உடன் பிறந்தாராகக் கருதித் தோழமை கொண்டதைக் காண முடிகிறது. வீடணனை நோக்கி இராமன், 'தோழ! முன் காட்டிடத்திலே நட்புக் கொண்ட குகன் என்னும் வேடனோடு நான்கு பேராக உள்ள நாங்கள் உடன் பிறந்தார் ஐவரானோம். அதன் பின் சூரியன் மைந்தனும், வானர வேந்தனுமாகிய சுக்கிரீவனோடு அறுவர் உடன் பிறந்தாரானோம். இன்று உன்னோடு சேர்த்து உடன் பிறந்தார் எழுவர் ஆனோம். கானகந் தந்த உனது தந்தையாகிய தயரதன் ஏழு மக்களைப் பெற்றுப் பெருமையுற்று விளங்குகின்றான்' எனக் கூறுவது எவ்வளவு நயமும் நேயமும் பொருந்தியுள்ளது? அஃதன்றி, வீடணனுக்குத் தயரதன் தந்தை என்பதை நுந்தை என்ற சொல்லால் கம்பர் குறிப்பிட்டுத் தோழமையின் முடிந்த எல்லையைக் காட்டுவது மிகவும் போற்றுதற் குரியதாகும். இவ்வாறு தோழமை என்ற பண்பை முதலிலிருந்து முடிவுகாறும் வெவ்வேறு இடத்தில் அமைத்து வலியுறுத்தியிருப்பதே அப் பண்பின் சிறப்பினையும் இச் சொல்லின் அழியாத் தன்மையையும் உணர்த்துகிறது. கவியரசரும் தோழமையால் தொல்லுலகை யாளலாம் எனக் கருதினர் போலும்!

## ஆழ்வார் போற்றிய தோழமை

கம்பர் குகன்பால் இராமன் கொண்ட தோழமையைச் சுட்டிப் பாராட்டுதற்கு முன்பே திருமங்கை மன்னன் போற்றிப் புகழ்வது காணத்தக்கது. ஆழ்வாரும் திருவரங்கப் பெருமானை வழிபடும் வாயிலாகக் குகனைத் தோழமையாகக் கொண்டதை நினைவூட்டி அருளுமாறு வேண்டுகின்றார். பன்னிரு ஆழ்வார்களுள் கடைசி ஆழ்வாராக விளங்கியவர் திருமங்கையாழ்வார்; 'கடைக் குட்டி' என்று அழைத்துப் பாராட்டும் சிறப்புடையவர்; மறவர்குலத்தே தோன்றி,

மங்கை என்ற நகரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்தவர்; நாகப்பட்டினத்துப் புத்தர் கோயிலை மாற்றித் திருவரங்கப் பெருங்கோயிலுக்குத் திருப்பணி செய்தவர்; திருமாலிடத்துப் பக்தி பூண்டு பல திருப்பதிகளுக்கும் சென்று திருப்பதிகங்கள் பாடியவர். இன்றும் நாலாயிரப் பிரபந்தத்தில் அவை இடம் பெற்றுப் போற்றிப் புகழப்படுகின்றன. அவர் அருளிய பெரிய திருமொழியில் தோழமையின் மேன்மையை ஒரு திருப்பாடலால் வெளிப்படுத்தியுள்ளமையைக் கீழே காணலாம்.

"ஏழை யேதலன் கீழ் மகனென்னு(து)
இரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து
மாழை மான்மட நோக்கி யுன்தோழி
யும்பி யெம்பியென் றொழிந்திலை யுகந்து
தோழன் நீ யெனக்கிங் கொழி யென்ற
சொற்கள் வந்தடியேன் மனத்திருந்திட
ஆழி வண்ண நின்னடியிணை யடைந்தேன்
அணிபொழில் திருவரங்கத் தம்மானே."*

சங்க காலத்திற்கு ஆயிரமாண்டுகட்குப் பின் தோன்றிய திருமங்கையாழ்வார் தோழன் என்ற சொல்லினை மறவாது போற்றியமை குறிப்பிடத் தக்கது. திருமாலின் திருக்குணங்களைப் பாராட்டும் வாயிலாக அவனுடைய தோழமைப் பண்பையும் மன முருகிப் பாராட்டுதலே மேலே குறிப்பிட்ட பாடலாம். கம்பர் காலத்திற்கு முற்பட்ட திருமங்கையாழ்வார், திருமாலின் அவதாரமாகிய இராமன் குகனுக்கு இரங்கி, 'சீதை உன் தோழி; இலக்குவன் உன் தம்பி' என உறவாக்கியதோடன்றி உள்ளன்பு கொண்டு, 'நீ என் தோழன்' என்று பாராட்டிக் கூறிய சொற்

* பெரிய திருமொழி, 1418.

களை என்னுல் மறக்க முடியாது. அந்தப் பெருங் குணத்தை மனத்திலே இருத்தி உன் திருவடியடைந் தேன்'' என்று நினைந்து பாடியிருப்பது உளங் கொளத் தக்கது. இறைவனைத் தோழனுகக் கொள்ள விரும்புவதும், இறைவன் அடியாரைத் தோழனுகக் கொள்வதும் மரபாகும். சுந்தரரை இறைவன் தோழ ணுகக் கொண்டதையும், இராமன் குகனைத் தோழனுகக் கொண்டதையும், திருமங்கை ஆழ்வார் திருமாலிடம் தம்மைத் தோழனுகக் கொள்ள வேண்டுவதும் ஒருங்கே வைத்துப் பார்த்து மகிழத்தக்கன. கி. பி. எட்டாம் நூற்ருண்டிலே ஆழ்வார் தோழமையை நினைவூட்டுதல் போலவே, பன்னிரண்டாம் நூற் ருண்டில் வாழ்ந்த கம்பரும் தோழமையை நினைவூட்டிச் செல்கின்ருர். இருவர் பாக்களும் ஒரே அமைப்பில் விளங்குதலை நோக்குங்கால் கம்பர் முந்தியவரோ, ஆழ்வார் முந்தியவரோ என்று ஐயுறுவண்ண முளது. எவ்வாருயினும் தோழமைச் செல்வத்தை மறவாது காத்து உலகம் உய்ய வேண்டும் எனும் கருத்து ஒவ் வொருவரிடத்தும் இருந்தது என்பது புலனுகின்ற தன்ரே ?

## பாரதி பாட்டில் தோழமை

தோழமைச் செல்வத்தைச் சங்க காலப் பெரு மக்களும், இடைக்காலக் கவிஞர்களும் எவ்வாறு உலகிற்கு அளித்தனர்என்பதை இலக்கிய வாயிலாகக் கண்டோம். அது போன்றே நாம் வாழும் காலத்தே தோன்றிய கவிஞர்களாகிய பாரதியார் முதலியோரும் அச் செல்வத்தை மறவாது வளர்க்கப் பாடுபட் டுள்ளமையை அறியலாம்.

இந்திய நாட்டின் விடுதலைக் கிளர்ச்சியில் வேட்கைகொண்டு உணர்ச்சிப் பாடல்களைப் பாடிய

பாரதியார் கண்ணனைக் குறித்தும் பல்வேறு அமைப்பில் அழகுபடப் பாடியுள்ளார். கண்ணனைத் தோழனாகக் கொண்டு பாடியிருப்பதே தோழமைச் செல்வம் அழிந்துபடாமல் வருவதற்குரிய சான்றாகும். அஃதன்றியும், கண்ணனைத் தந்தையாகக் கொண்டு பாடிய பாடலில் இறைவனின் தோழமை பாராட்டும் பண்பை மிக எளிமையாக அமைத்துள்ளார். கண்ணன் உயர்வு-தாழ்வு கருதாத தன்மையன் ; சாதி - சமயங் கடந்தவன் ; யாவரும் சமம் எனக் கருதுபவன்; வாழ்க்கையில் ஏலாத குழந்தையிடத்து இயற்கையாகவே தாயின் இரக்கம் சென்று உதவுவதுபோல ஏழைகளிடத்திலே மிக்க தோழமையுடையவன் ; செல்வத்தால் சிறந்து ஏழைக்கிரங்காரைக் கண்டு சீறும் குணத்தன் என்ற கருத்துப்பட அமைந்த அடிகளைக் கீழே குறிப்பிடுவோம் :

*"தேவர் குலத்தவன் என்றே—அவன்*
*செய்தி தெரியாதவர் சிலருரைப்பார்.*
*பிறந்தது மறக்குலத்தில்!—அவன்*
*பேதமற வளர்ந்ததும் இடைக்குலத்தில் !*
*சிறந்தது பார்ப்பனருள்ளே—சில*
*செட்டி மக்களோடு மிகப் பழக்கமுண்டு!*
*நிறந்தனிற் கருமை கொண்டான் !—அவன்*
*நேயமுறக் களிப்பது பொன்னிறப் பெண்கள் !*
*துறந்த நடைகளுடையான் !—உங்கள்*
*சூனியப் பொய்ச்சாத்திரங்கள் கண்டு நகைப்பான் !*
**ஏழைகளைத் தோழமை கொள்வான் !—செல்வம்**
**ஏறியார் தமைக்கண்டு சீறிவிழுவான் !**
*தாழவரு துன்பமதிலும்—நெஞ்சத்*
*தளர்ச்சி கொள்ளாதவர்க்குச் செல்வமளிப்பான்."*

தோழமையே வேற்றுமை களைய வல்லது என்பதைப் பாரதியார் நன்கு உணர்த்தியிருக்கிறார்.

## கவிமணி விழைந்த தோழமை

மனிதன் மனிதனோடு தோழமை கொள்வது இயற்கை. அதே மனிதன் எல்லா உயிர்க்கூட்டங்களோடும் தோழமை பாராட்டி வாழ்பவனாக இருத்தல் வேண்டும். பிறவுயிர்க்குத் தீங்கு செய்யாவண்ணம் இருப்பதும், பிறவுயிர்க்கு நேரும் துன்பத்தைத் தனக்கு ஏற்பட்டதாக எண்ணி இரங்குதலும் தோழமையே யாம். அஃது அருட் பண்பில் அடங்குமேனும் அவ் வுயிர்களிடத்து அன்பு செய்து நட்பாக்கி அதன் பின்னரே இரங்கி யுதவுதல் முறையாம். ஆகவே, சிற்றுயிர்களிடத்தும் தோழமை கொள்வதே அறிவுடைமை. அவனே மனிதன் என்று கருதத்தக்கவன். நாயினை வீட்டிலே வளர்த்து நட்புரிமை கொண்டாடும் மனித இனம், மக்களை நாயினும் கேடாக மதித்து ஒதுக்கி வாழ்வது எத்துணை பேதைமை ? தோழமைப் பண்பு கருக்கொள்ளுமிடத்தில் மக்களனைவரும் சமம் என்ற எண்ணம் நிலவும். எவ்வுயிரையும் தம்முயிர் போல் கருதிப் பாராட்டும் தோழமைப் பண்பைக் கவிமணி தேசிக விநாயகனார்,

> " ஈயும் எனக்குத் தோழன் !—ஊரும்
> எறும்பும் எனக்கு நேசன் !
> நாயும் எனக்குத் தோழன் !—குள்ள
> நரியும் எனக்கு நண்பன்!"

என்ற பாடலால் வெளிப்படையாகக் கூறியுள்ளார். பறந்து திரியும் ஈயும், ஊர்ந்து செல்லும் எறும்பும், ஓடித் திரியும் நாயும், பாய்ந்து செல்லும் நரியும் தோழமைக் குரியவையே. அவற்றினிடத்திலும் மனிதன் அன்பு கொண்டு தோழமை பாராட்ட வேண்டும் என்று கூறியமையால், மனிதன் மனிதனிடத்துத் தோழமை கொண்டு வாழவேண்டியது மிக இன்றி

யமையாதது என்பது குறிக்கப்படுகிறது. இக் கருத்து பாரதியாரின் பாப்பாப் பாட்டு என்ற பகுதியில்,

*" வாலைக்குழைத்து வரும் நாய்தான்—அது*
*மனிதர்க்குத் தோழனடி பாப்பா "*

எனக் காண்பதும் நினைத்தற் குரியது.

## பாரதிதாசன் காட்டும் தோழமை

பாரதியாரின் பாராட்டைப் பெற்றும், பாரதி காட்டிய வழியிலே புதுமைப்பாடல்களியற்றியும் புகழ் நிறுவி விளங்கும் புரட்சிக்கவி பாரதிதாசனவர்கள் தம் கவிதைத் தொகுதியில் தோழமையின் இன்றியமையாத தன்மையை வலியுறுத்தியுள்ளார்கள். 'யேசு பொழிந்த தெள்ளமுது' என்ற பகுதி ஏசுநாதரின் உண்மைத் தொண்டையும், உயிர்களிடத்துக் கொண்ட தோழமையையும் உணர்த்துவது. அவர் மக்களனைவரையும் ஏற்றத் தாழ்வின்றிச் சோதரராக மதித்தவர்; அன்பு எனும் அரிய படைகொண்டு அனைவரும் இன்புற்று வாழப் பாடுபட்டவர்; பிறர்க்காகத் தம்மைப் புவிக்குத் தந்த பெருமான் எனப் புகழ்ந்தோதப்படுபவர். அவரைப்பற்றித் தோழனும் தோழியும் உரையாடும் வாயிலாக அமைந்த பகுதியில் தோழமைச் செல்வம் வலியுறுத்தப் படுவதைக் காணலாம்.

*"........................................உளம்*
*தூண்டும் அருட்யேசு சொல்லிய*
*தென்னடி தோழி?—அவர்*
**'சோதரர் யாவரும்'** *என்று*
*முழங்கினர்—தோழா !*
*ஆண்மை கொள் யேசு புவிக்குப்*
*புரிந்த தென் தோழி ?—அவர்*
*அன்பெனும் நன்முரசு கொட்டும்*

முழக்கினர் தோழா !—அந்த
ஆண்டவன் தொண்டர்கள்
ஆகிடத் தக்கவர் யாவர்—எனில்
' அன்னியர், தான்' என்ற
பேதமில்லாதவர் தோழா !''

இவ்வடிகளில் யாவரும் சோதரர், அன்னியர் - தான் என்ற பேதமில்லாதவர் என்பவை தோழமை யைக் குறிப்பனவாம். வேற்றுமையில் ஒற்றுமையும், பன்மையில் ஒருமையும் காண்பதே தோழமை என் பது விளங்குகின்றதன்றோ ?

முடிவுரை

இதுகாறும் ஆராய்ந்தவற்றால் தோழமை என் பது, மக்கட்கு இன்றியமையாத பதினாறு வகைச் செல்வங்களுள் சிறந்தது என்பதும், தோழமை என்ற பண்பும் சொல்லும் மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்து இன்றுவரை அழியாது வருவன என் பதும், அன்பு, அருள் என்ற இரண்டையும் இணைத்து இன்பந்தரும் பண்பு எனவும், தமிழிலக்கியங்களில் மறவாது கவிஞர் பெருமக்களால் வலியுறுத்தப்பட் டுள்ளது என்பதும், சாதி சமய சாத்திர கோத்திரங் கடந்து உலகை ஒன்றுபடுத்த இன்றியமையாதது என்பதும், யாதும் ஊர் யாவரும் கேளிர் என்ற வாழ் வளிக்கும் பண்பு இஃதொன்றே என்பதும், இன்றைய உலகத்தில் வாழும் மக்கட்கு வேண்டுவதும் தோழ மைச் செல்வமே என்பதும் கண்டோம்.

தோழமையே தொல்லுலகை யாளமுடியும். தோழமையே ஒரு குலத்தை அமைக்கும். ஒருமை வழிபாட்டை நிலவச் செய்யும். தோழமைப் பண்பு

கொண்டு வாழ்வோரே தூயவுள்ள முடையவர்; அன்புள்ள முடையவர் ; பரந்தவுள்ள முடையவர்; தொழிலுலகத்தவர் யாவரும் ஒன்று என்னும் தாயுள்ள முடையவர், அவர்கள் வாழுமிடத்தில் தன்னல மில்லை ; பகைமை யில்லை ; போரும் பூசலு மில்லை. இன்பம் பொங்கும் ; அமைதி நிலவும் ; அருள் நிலைக்கும். இத்துணை நன்மை பயக்கும் தோழமைச் செல்வம் யாவரும் தொழத்தக்க அரிய செல்வமன்றோ ?